Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 352

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர். மஹாவித்வான்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஸ்ரீவாசரெம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பிங்களஹு புரட்டாசிமீ அக்டோபர்



## குறிக்கொள்ளவேண்டிய பிழை திருத்தம்

இவ்விதழில் **உபந்யாஸக ஸௌபாக்யம்** என்றொரு கட்டுரை ஆரம்பம் செய்து "திவ்யப்ரபந்தத்திலும் சில வினவிடைகள்" என்ற மகுடத்தின்கீழ், "3 (வினு) எந்தெந்த திவ்யதேசங்களில் எந்தெந்த அரசர்கள் திருப்பணிசெய்தனர்?" இந்த வினவின் விடையில்—"செங்கணுன் கோச்சோழன் சேர்ந்தது—திரு அழுந் தூரில்" என்று தவருக அச்சிடப்பட்டுவிட்டது. இங்குச்சில வரிகள் விடுபட்டுப் போயின. இங்கு இங்ஙனே திருத்திவாசிக்கவேணும். (அதாவது—)

"செங்கணுன்கோச் சோழன் சேர்ந்தது — திருநறையூரில். (வினு) வீதிகள் தோறும் நான்கு வேதங்களும் அலையெறியும் கடல்போல் முழங்குவது எந்த திவ்ய தேசத்தில்? (விடை) "முதுநான்மறை வீதிதொறும் அலையாருங்கடல்போல் முழங்கு வது—திருஅழுந்தூரில்" என்று.

---

## சந்தாதாரர்களுக்கு ஓர் அறிவிப்பு.

பலர் பலவாண்டுகளாக ஸ்ரீ ராமாநுஜனுக்குச் சந்தா பாக்கி செலுத்தாமலிருக்கி ருர்கள். அவரவர்களுக்கு நாம் கடிதமெழுதி எச்சரிக்கை செய்வதில்லை "நம்முடைய உதவியில்லாமல் பத்திரிகை எப்படி நடைபெறும்?" என்று அவரவர்களுக்கே தோன்ற வேண்டும். இம்மாதத்தில் பலபேர்களுக்குப் பத்திரிகை அனுப்பாமல் நிறுத்தியாயிற்று. மிச்சமுள்ளவர்களுக்கும் அடுத்த மாதத்தில் நிறுத்தியாகும் அவரவர்கள் "நாங்கள் சந்தா செலுத்தியிருப்பது இன்ன தேதியில்" என்று தெரிவிக்கவேண்டும். பாக்கி யுள்ளவர்கள் பத்திரிகையை விரும்பினுல் உடனே M. O. செய்யவேண்டும்.

இப்படிக்கு, **மானேஜர்**.

---

## — விசேஷ அறிவிப்பு —

நிகழும் பிங்களவாண்டு எம்பெருமானுர் திருவவதார ஸம்வத்ஸர மென்பதுமட்டு மல்லாமல் *ஏராருமெதிராசரென வுதித்தான் வாழியே* என்று நாடோறும் வாழ்த்தப் படும் நம் மணவாளமாமுனிகளின் திருவவதார ஸம்வத்ஸரமாகவும் கருதப்படுவது உசிதமாகையாலும், நாளது ஐப்பசித்திங்களில் ஆதியிலும் அந்தத்திலுமாக இரண்டு திருமூல நன்னுள் வருவதாலும் இந்த விசேஷங்களுக்கு ஞாபகச்சின்னமாக "***ஸ்ரீமத் வரவரமுநிவர்ய ஸித்தாந்தஸாரம்***" என்கிற நூல் அடியேனுல் எழுதி அச்சிடப் பட்டு, முதலில் திருவயிந்திரபுரம் மணவாளமாமுனிகள் ஸன்னிதியிலும், பிறகு தேவப்பெருமாள் தேவஸ்தான மாமுனிகள் ஸன்னிதியிலும் அரங்கேற்றம் செய்விக் கப்படும். இந்தநூலை பகவத் ராமாநுஜ ஸித்தாந்தஸாரம் என்றும், ஸகல பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திஸாரம் என்றும் வழங்கத்தகும். இங்ஙனம்,

P. B. ***அண்ணங்கராசாரியர்***, (பத்ராதிபர்)

# ஸ்ரீ ராமாநுஜன் 352



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

தொகுதி 30 | பிங்களஸெ புரட்டாசிமீ 5—10—1977 | பகுதி—4


## ஸ்ரீவைஷ்ணவ ஸத்ஸம்ப்ரதாய ஸபை - மதுரை

அன்புடையீர்! மேலே குறித்த ஸபையின் நாற்பத்தெட்டாவது ஆண்டுவிழா அழைப்பிதழ் (20-9-77) இன்று நமக்குக் கிடைத்திருக்கின்றது. மதுரையில் வாழும் ஸ்ரீமதுபயவே. வித்வான். R. ரங்கராஜய்யங்கார் M. A. நமது நெடுநாளைய நண்பர் அன்பார்ந்த கடிதத்துடன் இவ்வழைப்பிதழை நமக்கு அனுப்பியுள்ளார். சிலபலவாண்டு கட்கு முன்பு மதுரையில் ஸ்ரீ உவே. மநீஷி மாந்ய. R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமி, S. ஸௌந்தரராஜய்யங்கார் ஸ்வாமி முதலான பிரமுகர்கள் வாழ்ந்தகாலத்தில் மேலே குறித்த ஸபை வெகு சிறப்பாக நடைபெற்றுவந்தது. வருஷாந்தக் கொண்டாட்டமாக மஹாஸபை ஆண்டுதோறும் தவறாமல் நடைபெற்று வந்தது. ஏறக்குறைய முப்பது வருஷகாலம் அதில் நாம் இடையறாது அந்வயித்து வந்தோம். அதற்கு ப்ரவர்த்தகர்களாயிருந்த மஹநீயர்கள் திருநாடலங்கரித்த பின்பு ஷ ஸபை விசேஷவைபவமாக நடைபெறாவிட்டாலும் உள்ளூர் வித்வான்களைக் கொண்டு ஒருவாறு நடத்தப்பட்டே வருவதாக நாம் கேள்விப்பட்டிருந்தோம். இப்போது நாற்பத்தெட்டாவதாண்டு விழா [வார்ஷிகமஹோத்ஸவம்] நிகழும் புரட்டாசி மீ 18, 19 4-5-10-77) தேதிகளில் மதுரை கூடலழகர் ஸந்நிதி தெற்குப் பிராகார மண்டபத்தில் நடைபெறுமென்றும், அப்போது ஸ்ரீவைஷ்ணவஸத்ஸம்ப்ரதாய நிஷ்டர்களான மஹாவித்வான்களின் உபந்யாஸங்கள் காலை மாலைகளில் நடைபெறுமென்றும் அறிவிக்கப் பட்டிருப்பது கண்டு நாம் மகிழ்ச்சியின் எல்லைநிலத்தில் நிற்கிறோம். ஸபா நிர்வாஹகர்கள் நமது வருகையையும் மங்களாசாஸனத்தையும் கோரியிருக்கின்றனர் ஷமஹோத்ஸவத்தில் நேராகக் கலந்து கொள்ள முடியாமையினால் இப்பத்திரிகை மூலமாக நமது மங்களாசாஸனத்தைத் தெரிவித்துக் கொள்வதுடன் சில உபந்யாஸங்களையும் உபஹரிக்கிறோம். இவை அன்றைய ஸபையில் கூடும் மஹான்களினால் செவிசாத்தப்படுமென்று நம்புகிறோம்.

## மங்களாசாஸனம்

(வெண்பா) சச்சம் பிரதாயச் சாரப் பொருள்களெலாம்
நிச்சலுமே நீநூழி நின்றுலவ-அச்சுதனுர்
ஆணையினுல் ஆரியர்கள், ஆரம்பஞ் செய்யுமிது
நீணிலத்திற் கேய்ந்த நிதி.

2. தென்மதுரை மாநகர்வாழ் தென்னு சிரியர்தம்
நன்முயற்சி நன்கு நலம்பெறவே-நன்மதிசேர்
நாவலர்கள் நாடோறும் நல்லுரைகள் நன்களிக்கக்
கோவலனுர் கூரருளைக் கூறு.

## மங்களாசாஸனத்தைப்பற்றி ஓர் சொற்பொழிவு P. B. A.

மங்களாசாஸன மென்கிற சொல் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் தனிச்சிறப்பு வாய்ந்தது. ஸ்ரீராமாயணம் முழுவதும் மங்களாசாஸன மயமாயிருக்கச் செய்தேயும் ஸ்ரீராமாயணம்பிரவசனம்செய்யும் ஸ்ரீவைஷ்ணவேதரர்களின் வாக்கில் மங்களாசாஸன மென்கிற சொல்லை விசேஷமாகக் காண்பதரிது. மணவாள மாமுனிகள் உபதேசரத் தினமாலையில்—"மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள், தங்களார்வத்தளவு தானன்றிப்-பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்ருன், பெரியாழ்வா ரென்னும் பெயர்." என்றருளிச்செய்தபடி மங்களாசாஸனத்தில் முதல் ஸ்தானம் பெற்றிருப்பவர் பெரியாழ்வாராதலாலும், அவ்வாழ்வார் மங்களாசாஸனம்தொடங்கியது இம்மாநகரிலாதலாலும் ஈண்டு மங்களாசாஸனத்தின் மாண்பையும், ஸ்ரீராமாயணத் தில் அது பொலிந்தோங்குமிடங்களையும்பற்றி விண்ணப்பம் செய்ய விரும்புகிறேம்.

மங்களாசாஸனமென்பது பர்யாயத: ஆசீர்வாதமென்றபடியாம். பெரியார் சிறியார் களுக்கு ஆசி கூறுவதுண்டேயல்லது, சிறியார் பெரியார்க்கு ஆசி கூறுவதென்பது அஸம்பாவிதம். பெரியார்களில் *வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்* என்று ஓதப் பட்ட பரமபுருஷனிற்காட்டில் வேறு பெரியார் இல்லை. *மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்குந் தேவா வோ!* என்று போற்றப்படும் அப்பரமபுருஷனுக்கு நாம் மங்களா சாஸனம் செய்வதென்பது [ஆசிகூறுவதென்பது] ஸ்வரூபத்திற்குச் சேருமா? என் பதை முந்துறமுன்னம் ஆலோசிக்கவேண்டும். இன்று புதிதாக நாம் ஆலோசிக்க வேணுமோ? *ஸர்வஜ்ஞலோக குருநிர்மித மார்ய போக்யம் வந்தே ஸதா வசநபூஷண திவ்ய சாஸ்த்ரம்* என்று போற்றப்படும் ஸ்ரீ வசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் அரு ளியவற்றை, மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவிச் சிறிது விவரித்து விஜ்ஞாபிப்பது கேளீர்.

மங்களாசாஸனமாவது — அமங்களமொன்றும் நேராதபடி மங்கலம் தழைத் தோங்கவேணுமென்று ஆசாஸிப்பதேயாம். அமங்கலங்கள் புகுவதற்கு ப்ரஸக்தியுள் ளது நம்மைப்போன்ற அற்பர்களிடத்தேயல்லது, எல்லாருடைய அமங்கலங்களையும் போக்கியருள வல்லவனும், மங்கலமே வடிவெடுத்தவனுமான எம்பெருமான் பக்கலில் அமங்கலம் புகுவதற்கு அற்பமும் அவகாசமில்லையே. அவனே ஸர்வரக்ஷகனென்று புகழ்பெற்றவன்; அவனிடத்தில் நாம் ரக்ஷை பெறத் தகுந்தவர்களேயொழிய, அவனை ரக்ஷிக்க நாம் நெஞ்சாலும் நினைக்கத்தகாதே—என்று சங்கிக்க நேரும். கேண்மின்;

எம்பெருமான் ஸர்வரக்ஷகனென்பதும் அவனுக்கு எவ்விதமான் ஆபத்தும் அமங்கலமும் நேராதென்பதும் உண்மையே. ஒருவரிடத்தில் நமக்கு உள்ளத்துள் ஊறிய அன்பு இருக்குமாஞல் அவ்வன்பு என்னென்ன செய்விக்குமென்பதை நாமறியோம். ஸ்ரீபாஷ்யத்தில் ஓரிடத்தில் ஸ்நேஹஶப்தப்ரயோகம் பண்ணினுர் ஸ்வாமி எம்பெருமானுர். அவ்விடத்தில் ச்ருதப்ரகாசிகாபட்டர் வியாக்கியானம் செய்தருளினுர்—

"ஸம்பந்தவிஶேஷாந்விதேஷு ப்ரீதி: ஸ்நேஹ:;
யஸ்ய விபாகா: – அஸ்தாநபயஶங்கித்வம்,
தோஷாநவபாஸ: தோஷேபி குணத்வபுத்தி: இத்யாதய:" என்று.

அன்பு முற்றமுற்ற, அஸ்தானத்தில் பயஶங்கையும் குற்றம் கண்ணில் படாமையும் குற்றத்தையே நற்றமாகக்கொள்ளும் பான்மையுமுண்டாம் என்றபடி. இது உலகத்தில் ஸாமான்யமாக உண்டாகக்கூடியது. ஆபாஸ விஷயங்களிலேயே அன்பு பூண்டிருக்கிற நம்போல்வாருடைய அற்ப மதியைக்கொண்டு இதன் தத்துவத்தை உணர முடியாது. யசோதைப்பிராட்டிக்கு, கண்ணன் ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம் என்னுமுணர்ச்சி யிருக்கச்செய்தேயும் "காப்பாருமில்லை கடல்வண்ணு ! உன்னைத் தனியேபோய் எங்குந் திரிதி" என்று மாய்கிருளவள். *க்ருஷ்ணத்ருஷ்ணுதத்வமான நம்மாழ்வாரும் கண்ணனை உள்ளபடி அறிந்திருக்கச்செய்தேயும், *அவத்தங்கள் விளையும் என்சொற்கொள் அந்தோ! ஆழுமென்னுருயிர் ஆன்பின்போகேல்* என்று கோபீதாதாத்மியபாவனையில் பேசுகிருர். இந்நிலத்தில் கதை இருக்கட்டும்; திருநாட்டில் கதை கேளுங்கள். *ஆங்காரவாரமது கேட்டு, அழலுமிழும் பூங்காரரவு* என்கிருர் திருமழிசைப்பிரான். "ஹாவு! ஹாவு! ஹாவு!" என்று ஸாமகோஷம் நடைபெறுமிடத்தில் யாரால் என்ன அபாயம் நேரக்கூடும்? *ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமநி* என்று புகழப்பட்ட ஞானநிதியான திருவனந்தாழ்வானன்றே ஸாமகோஷத்தை அரக்கரசுரர்போல்வாருடைய ஆரவாரமாக மருண்டு அழலை உமிழ்கிருன்.

பட்டர் ஸ்ரீகுணரத்ந கோஶத்தில் ஸ்ரீவைகுண்டத்தை வருணிக்கும் சுலோகத்தில் திருநாட்டுக்கு [**அபயம்**] என்று ஒரு விஶேஷணமிட்டார். அஞ்சவேண்டாத நிலம் என்று தாற்பரியம். ஏதனுல் அஞ்சவேண்டாத இடம் என்று தாமே கேட்டுக்கொண்டு "ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷாவ்யஸநிபி: சார்ங்கசக்ராஸி முக்க்யை: அபயம்" என்றருளிச் செய்துளர். இவ்விஷயத்தை இன்னமும் பன்னியுரைக்க பகவத்விஷயகமான ஸ்நேஹத்தைக் கனவிலுங் கண்டறியாத நாம் அதிகாரிகளல்லோம் என்று நிற்போம்

**—ஸ்ரீராமாயணத்தில் மங்களாசாஸனங்கள் காணுமிடங்கள் —**

**1. விச்வாமித்ர முனிவன்.** தனது வேள்வியைக் காப்பாற்றிக் கொடுக்கும்பொருட்டுத் தயரதமன்னவனிடம்வந்து *அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்ய பராக்ரமம்* என்று உண்மையாகவே சொல்லி [ஸ்ரீராமலக்ஷ்மணர்களை] அழைத்துக்கொண்டு போகாநிற்கச்செய்தே தாடகை வந்து அட்டஹாஸம் செய்ய, தாசரதிகளின் ஸௌகுமார்யத்தைக் கண்டுகலங்கி என்னுகுமோ! என்றஞ்சி *விச்வாமித்ரஸ் து ப்ரஹ்மர்ஷி: ஹுங்காரேண அபிபர்த்ஸ்ய தாம், ஸ்வஸ்தி ராகவயோரஸ்து

ஜயஞ்சைவ அப்யபாஷத* என்கிறபடியே தான் முன்னே நின்று அவனை ஹுங்கரித்து தாசரதிகளுக்கு ஒரு தீங்கும் வாராதபடி மங்களாசாஸனம் பண்ணினான்.

**2. ஸ்ரீ ஜநகராஜன்.** பெருமாளுக்குப் பிராட்டியைக் கன்னிகாதானம் பண்ணிக்கொடுக்கிற வேந்தர் தலைவனான சனகராசன் *இயம் ஸீதா மம ஸுதா ஸஹ தர்மசரீ தவ, ப்ரதீச்சசைநாம்* என்று சொல்லாநின்று இவருடைய அழகையும் ஸௌகுமார்யத்தையுங் கண்டு கலங்கி, இச்சேர்த்திக்கு ஒரு அவத்யம்வாராதொழிய வேணுமென்று (*பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா*) என்பதற்கு முன்னே *பத்ரம் தே* என்று மங்களாசாஸனம் பண்ணினான்.

**3. தசரதசக்ரவர்த்தி.** பெருமாள் பிராட்டியைத் திருமணம் புணர்ந்து திருவயோத்திக் கெழுந்தருளாநிற்க, பரசுராமன் 'என் வில்வலி கண்டுபோ' வென்று எதிர்வந்தவாறே பெருமாளுடைய ஶக்திவிஶேஷத்தை நன்கறிந்திருக்கச் செய்தேயும் இவருடைய இளமையையும் ஸௌகுமார்யத்தையுமே கண்டஞ்சி, தான் முன்னே யோடிச்சென்று *பாலாநாம் மம புத்ராணும் அபயம் தாதுமர்ஹஸி* என்று சொல்லி அவனை ஶரணமடைந்து, பின்னையும் அப்பரசுராமன் பெருமாள் மேலே அடர்ந்து செல்லுகிறபடியைக்கண்டு உயிரிழந்திருந்து அவன் தோற்று மீண்டு போனானென்று கேட்டபின்பு *புநர் ஜாதம் ததா மேநே ஸுதாந் ஆத்மாநமேவ ச* என்று தானும் பிள்ளைகளும் மறுபிறவி பிறந்தாராக நினைத்ததாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

**4. ஜனகராஜன் திருமகள்.** பெருமாள் யுவராஜ பட்டாபிஷேகங் கொண்டருள்வதற்காக திவ்யாலங்காரங்கள் கொண்டு சக்ரவர்த்தியின் மாளிகைக்கு எழுந்தருளுகிறபோது பிராட்டி இவரழகிலே தோற்று 'இதுக்கு என்வருகிறதோ' வென்று ப்ரேமத்தாலே கலங்கி *பதிஸம்மாநிதா ஸீதாபர்த்தாரம் அஸிதேக்ஷணா. ஆத்வாரம் அநுவவ்ராஜ மங்களாந்யபிதத்யுஷீ* என்று திருவாசலளவும் மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு பின் சென்று *பூர்வாம் திஶம் வஜ்ரதரோ தக்ஷிணும் பாது தே யம:, வருண: பச்சிமாமாஶாம் தநதஸ்து உத்தராம் திஶம்* என்று திக்பாலகர்களை இவர்க்கு ரக்ஷகராக அபேக்ஷித்ததாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. பெருமாளுடைய பெருமையை நன்கறிந்தவளான பிராட்டியின் செய்கை இது.

**5. அயோத்யாவாஸி ஜனங்கள்.** அயோத்யாவாஸி ஜனங்களில் பெருமாள் பெருமையை உணராதாரொருவரில்லை; அப்படி யிருந்தும் *ஸ்த்ரியோ வ்ருத்தாஸ் தருண்யச் ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:* என்னும்படி சிறுமிகள் யுவதிகள் கிழவிகள் உட்பட யாவரும் காலையும் மாலையும் ஸகலதேவதைகளையும் தொழுது 'எங்களிராமனுக்கு ஓர் அவத்யமும் விளையாதிருக்கவேணும்' என்று பிரார்த்தனை செய்துகொண்டு வந்தார்களென்றது. [யஶஸ்விந: என்றது—இராமபிரானுக்கு இட்ட விஶேஷணம. அகில ஹேய ப்ரத்யநீகனென்றும், மஹாவீரனென்றும் ஸகல ஜகத்ரக்ஷகனென்றும் புகழ்படைத்த பெருமாள் விஷயத்திலே இப்படி கலங்கினார்களென்கை.

**6. தண்டகாரண்யவாஸிகளான மஹரிஷிகள் ;—** "நாம் படுகிற கிலேஶங்களை யெல்லாம் போக்கவல்லவர் இவரே" என்று நன்கறிந்துள்ள

தண்டகாரண்ய வாஸிகளான முனிவர்கள் *தே தம் ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வா வை தர்மசாரிண:, மங்களாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந் த்ருடவ்ரதா:* என்னும் படி மங்களாஶாஸநத்திலே ஊன்றினர்களாயிற்று. அதன் காரணத்தை வால்மீகி பகவான் *ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம், தத்ருஶுர் விஸ்மிதாகாரா: ராமஸ்ய வநசாரிண:* என்கிற சுலோகத்தினல் வெளியிட்டார். இவ்விடத்திலே "ஒருநாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும்பாடாயிற்று இது" என்கிற ஸ்ரீவசனபூஷண சூர்ணை அநுஸந்திக்கத்தக்கது.

**7 *பெரியவுடையார் (ஜடாயுமஹாராஜர்).*** இவ்விஷயம் சிறிது விவரித்து உணர்த்தவேண்டியதாகிறது. திருவடி இலங்கையிற் புகுந்து பிராட்டியைக் கண்டவுடனே *துஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யத் அநயா ப்ரபு:, தாரயத்யாத்மநோ தேஹம் ந ஶோகேநாவஸீததி' [இராகவன் இப்படிப்பட்ட பிராட்டியைப் பிரிந்தும் சடக்கென கோதாவரியில் விழுந்து படியாதே உயிர்தரித்திருப்பது எதனலோ! தேஹம் தன்னடையே போகவேணுமே! அப்படி போகாமலிருப்பது ஏனே'] என்று வியந்து பேசினர். நம் முதலிகள் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்கையில், ஆரண்ய காண்டத்திலுள்ள ஜடாயுமஹாராஜரின் ஒரு வார்த்தையைக் கொண்டு ஸமாதானம் பண்ணினர்கள். அதாவது, பஞ்சவடியிலே பெருமாள் பிராட்டியைப் பிரிந்து அங்குமிங்கும் தேடிக்கொண்டு வருகிறபடியைக் கண்ட ஜடாயுமஹாராஜர், *யாமோஷதிமிவ ஆயுஷ்மந்! அந்வேஷஸி மஹாவநே, ஸா தேவீ மம ச ப்ராணா: ராவணேந உபயம் ஹ்ருதம்* என்றர். இதில் ராம! என்று ஸம்போதியாதே ஆயுஷ்மந்! என்று ஸம்போதனமுள்ளது. பெருமாள் அப்போது படுகிற துயரத்தைக்கண்டு இதனல் இவர்க்கு தேஹவியோகம் நேர்ந்து விடுமோ! என்று ஜடாயுவுக்கு அதிஶங்கை தோன்றினபடியால் அப்படி ஒன்றும் நேராதபடிக்கு ஆயுஷ்மந்! என்று மங்களாஶாஸனம் பண்ணினபடி. இது பற்றியே அவர்க்குப் 'பெரியவுடையார்' என்று திருநாமமாயிற்று. [பெரியாழ்வாரென்றது போல.] பிராட்டியின் வியோகத்தில் பெருமாள் உயிர்தரித்திருந்ததற்குக் காரணம் ஜடாயுமஹாராஜரின் ஆசீர்வாதமே யென்றயிற்று நம் முதலிகள் நிர்வஹிப்பது. மற்றுமுள்ளாருடைய மங்களாஶாஸனத்திற்காட்டில் இவருடைய மங்களாஶாஸனமே மிக மேம்பட்டதென்றுணர்க.

**8. *திருவடி [அனுமன்].*** பம்பைக் கரையிலே எழுந்தருளாநின்ற பெருமாளை முதன் முதலாகக் கண்ட திருவடி, *ஆயதாச் ச ஸுவ்ருத்தாச் ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:?* என்றர் கணையங்கள் போலே யிருக்கிற திருத்தோள்களின் மிடுக்கைக் கண்டு 'நமக்கிவர் ரக்ஷகராகக் குறையில்லை, என்றெண்ணியிருக்கச் செய்தேயும் அவற்றினழகைக் கண்டு ஈடுபட்டு 'பிறர் கண்ணெச்சில் படில் செய்வதென்?, என்று அதிஶங்கைபண்ணி, திருவாபரணங்களாலே திருத்தோளழகை மறைத்திட்டு வையாதே இப்படி வெளியிடலாகுமோ வென்று வயிறு பிடித்துப் பேசினமை காண்க.

**9. *ஸுக்ரீவமஹாராஜர்.*** வாலிவதம் முதலியவற்றலே பெருமாளுடைய ஶக்தி விஶேஷத்தை நன்கு கண்டறிந்தவர் ஸுக்ரீவ மஹாராஜர்: இவர் கலங்கினது

A

மிகமிக ஆச்சரியம். விபீஷணுழ்வான் நாலுபேரும் தானுமாக வந்து தோற்றின போது, *ஏஷ ஸர்வாயுதோபேதச் சதுர்ப்பிஸ் ஸஹ ராக்ஷஸை:, ராக்ஷஸோப்யேதி பச்யத்வம் அஸ்மாந் ஹந்தும் ந ஸம்ஶய:* என்று நமக்கெல்லாம் ஒருயிரான பெருமாளை நலியும் முகத்தாலே நம்மையெல்லாரையும் முடிக்க வருகிருனிவனென்று நிச்சயித்து முதலிகளுக்குக் காட்டி* வத்யதாமேஷ தீவ்ரேண தண்டேந ஸசிவைஸ் ஸஹ ராவணஸ்ய ந்ருஶம்ஸஸ்ய ப்ராதா ஹ்யேஷ விபீஷண:* என்று ராவணஸம்பந்தத்தையே பார்த்து (அவனுடைய ஶரணுகதியை ஒன்ருகமதியாதே) இவனைச் சித்ரவதம் பண்ணவேணுமென்றும், இவனை அங்கீகரிக்கவே கூடாதென்று ஒருநிலை நின்றும் படாதபாடும் பட்டது 'இவனுலே பெருமாளுக்கு என்ன தீங்கு நேருமோ?, என்னுமதிஶங்கையினுலல்லவோ? [இங்கே கம்பராமாயணச் செய்புளொன்று நினைக்கத்தக்கது. அதாவது] *ஆதலால் அபயமென்ற பொழுதத்தே அபயதானம், ஈதலே கடப்பாடென்பது இயம்பினீர் என்பால் வைத்த, காதலால் இனி வேறெண்ணக் கடவதென்? கதிரோன்மைந்த! கோதிலாதவனை நீயே என்வயிற்கொணர்தி யென்ருன்* என்று சுக்கிரீவனை நோக்கிப் பெருமாள் அருளிச்செய்வதாக இட்ட செய்யுளில் 'என்பால்வைத்த காதலால்' என்றது உயிரானவார்த்தை. குஹப்பெருமாளும் பரத்வாஜ முனிவரும் பரதாழ்வானிடத்தில் அதிஶங்கை கொண்டதற்கும் இதுவே காரணம். (இவ்வளவில் நிற்போமிப்போது.)

## உபந்யாஸக ஸௌபாக்யம் P. B. A.

அங்காங்கு உபந்யாஸங்கள் செய்து புகழும் பொருளும் படைக்கவேணுமென்கிற குதூஹலங் கொண்ட சிலர் அதற்காக என்னென்ன ஸாதனங்கள் ஸம்பாதிக்க வேணுமென்று நமக்கெழுதிக் கேட்டிருந்தார்கள். அவர்கள் நமக்கு மிகவும் ஆப்தர்களாயிருந்தபடியாலே அவர்களுக்கு நாம் தெரிவித்தோம்- ஆங்காங்கு உபந்யாஸங்கள் செய்து வருகின்ற சிலவித்வான்களின் திருநாமங்களைக் குறிப்பிட்டு, அன்னவர்களின் உபந்யாஸ கோஷ்டிகளில் அடிக்கடி அந்வயித்துக் கொண்டேயிருந்தால் நாளடைவில் உபந்யாஸஶக்தி உண்டாகி அது அபிவிருத்தியுமடையும்; அது தவிர நம்முடைய பூர்வாசார்யர்களின் வியாக்கியான க்ரந்தங்களில் உதாஹரிக்கப் பட்டுள்ள இதிஹாஸ புராணுதி ப்ரமாணவசனங்களைச் சிந்தனை செய்து கண்டபாடமாக்கிக் கொள்வதும் மிக முக்கியம்—என்று தெரிவித்திருந்தோம். இதிஹாஸ புராணுதி ப்ரமாண வசனங்களை எவ்விதமாகக் கண்டஸ்தமாக்கிக் கொள்ளவேணுமென்பதை உபந்யாஸருசியுடையாரெல்லாரும் நன்கு தெரிந்து கொள்வதற்காக இங்குச் சில வினுக்களும் விடைகளுமாக வெளியிடுகிருேம்.

ஸ்ரீராமாயணுதிகளில் சில கேள்விகளும் உடனுக்குடனே பதில்களும் வரையப்படுகின்றன. விடைகளை வெளியிடாமல் வினுக்களை மட்டும் வெளியிட்டு வைத்தால் அது வித்வான்களைப் பரீக்ஷிப்பது போல் தோன்றும். தவிர, அதனுல் பலனென்றும் கண்டதாகாது; ஆகவே வினுக்களையும் விடைகளையும் வெளியிடுகிருேம். இப்படி பல நூற்றுக்கணக்கானவினுக்கள் தோன்றினுல் உடனுக்குடனே விடையிறுக்கும் படியான ஶக்தி பெறுவதற்கு ப்ரமாண வசனங்கள் பலவற்றிலும் உபஸ்திதி ஸம்பாதிக்கவேணுமென்பது அடியேனுடைய அபிஸந்தி. இந்த வினுவிடைகள் நீண்டகாலம் தொடரும்.

## இனி வினுக்களும் விடைகளும் காண்மின்

**1** (வினு.) *உபஸ்தித: எங்கேவருகிறது? உபஸ்திதம் எங்கே வருகிறது?

(விடை) அரண்யத்தில் இளையபெருமாள் சமைத்த பர்ணசாலையில் எழுந்தருளியிருக்கின்ற பெருமாளிடம் முறையிட்டுக் கொள்வதற்காகத் திரண்டுவந்த மஹர்ஷிகளை நோக்கி மிக்க வெட்கத்துடனே வார்த்தையாடத் தொடங்கின பெருமாள் *ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா, யதீத்ருசை ரஹம் விப்ரை: உபஸ்தேயை ருபஸ்தித:* என்றார். இங்கு உபஸ்தித:) என்பதைக் காணலாம். (2) பெருமாள் கடற்கரையிலெழுந்தருளியிருக்கச் செய்தே அவரை அடைக்கலம் புகவந்த விபீஷணுழ்வான் ஸுக்ரீவாதிகளான வானர முதலிகளைநோக்கி *நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம், ஸர்வலோகசரண்யாய ராகவாய மஹாத்மநே* என்றான். இங்கு உபஸ்தித மென்றுள்ளது. ஸ்தோத்ர ரத்நத்தில் *உபஸ்திதம் தேந புரோ கருத்மதா*

**2** (வினு.) பெருமாளுடைய பாஹுவைப்பற்றி ஏகவசனமாகச் சொல்லியிருப்பது எங்கே? த்விவசனமாகச் சொல்லியிருப்பது எங்கே? பஹுவசனமாகச் சொல்லியிருப்பது எங்கே? ஸ்ரீராமாயணத்துக்குள்ளேயே காட்டவேணும்.

(விடை.) பெருமாள் கடலைக்கடந்து இலங்கை செல்வதற்காக வருணனை வழி வேண்டிக் கடற்கரையிலே சயனித்தருளின படியைச் சொல்லா நின்ற வான்மீகிமுனிவர் *பாஹும் புஜக போகாபம் உபதாயாரி ஸூதந:, அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதி சிச்யே மஹோததே:* என்றார். இங்கு (பாஹும்) என்று ஏகவசனம் 2 வனத்திலே செல்லா நின்ற பிராட்டி யானை சிங்கம் புலி முதலான துஷ்டஜந்துக்களைக் கண்டு சிறிதும் அஞ்சவில்லை—என்று சொலலுமிடத்து *கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்ரம் வாபி வராங்கநா, நாஹாரயதி ஸம்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா* என்றது. இங்கு (பாஹூ) என்று த்விவசன முள்ளது. (3 பம்பைக்கரையிலே பெருமாளைக் கண்டதிருவடி *ஆயதாச் ச ஸுவ்ருத்தாச்ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:?* என்றார். இங்கு (பாஹவ: என்று பஹுவசனமுள்ளது.

**3.** (வினு *ரூபஸம்* என்பது ஓரிடத்தில் வருகிறதா? இரண்டிடத்தில் வருகிறதா?

(விடை) இரண்டிடங்களில்வருகிறது. (1)பெருமாளுடைய வடிவழகைக்கண்டு வன வாஸிகள் விஸ்மயப்பட்டார்களென்று சொல்லுமிடத்து *ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம், தத்ருசுர் விஸ்மிதாகாரா: ராமஸ்ய வநசாரிண:.* என்பதோரிடம். (2) தாசரதிகளால் தனக்கு நேர்ந்த அங்கபங்கத்தை முறையிடுகிற சூர்ப்பணகை *தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ* என்று வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டு போசிருளே, அது இரண்டாமிடம். எதற்கு? (ரூபஸம்) என்பதற்கு. இது துக்கட்டர் கேள்வி:

**4** (வினு) *ஸர்வபூதேப்ய:* எங்கே? *ஸர்வபூதேஷு* எங்கே? *ஸர்வபூதாநி* எங்கே? *ஸர்வபூதாநாம்* எங்கே?

(விடை) 1 பெருமாளுடைய அபயப்ரதாந ச்லோகமான *ஸக்ருதேவ ப்ரபந்நாய* ச்லோகத்தில்—'ஸர்வபூதேப்ய:'. (2) உபக்ரமே வால்மீகி நாரத ஸம்வாதத்தில்

*ஸர்வபூதேஷு கோஹித:* (3) பகவத்கீதை 18-61 *ப்ராமயந ஸர்வபூநாநி* (4) அதிலேயே பூர்வார்த்தம்—*ஈச்வரஸ் ஸர்வபூதாநாம்* (*ஸர்வபூதாநியும் *ஸர்வ பூதேஷுவும் கீதையில் அதிகம்.)

**5** (வினு) 'பார்த்துக்கொண்டே போனுர்கள்' என்று மூலமிருக்க, 'பாராதே போனுர்கள்' என்று பொருள்பணித்திருப்பதெங்கே? சொல்லமுடியுமா?

(விடை) ஏன் முடியாது? சொல்லுகிறேன். தசரத சக்ரவர்த்தி துஞ்சின செய்தியைப் பரதாழ்வானுக்கு அறிவிக்கப் புறப்பட்டுச் சென்ற தூதுவர் விரைந்து சென்றதைச் சொல்லும் முனிவர் "ஸராம்ஸி ச ஸுபுல்லாநி நதீச்ச விமலோதகா: நிரீக்ஷமாணுஸ் தே ஜக்மு: தூதா: கார்யவசாத் த்ருதம்* (அயோ.) 68-14) என்ருர். இதில் (நிரீக்ஷமாணு: ஜக்மு:) என்றதற்குப் 'பார்த்துக்கொண்டே போனுர்கள். என்று தான் மொருள். ஆயினும் மருமமறிந்த நம்பிள்ளை திருவாய்மொழியில் (6-1-7) *ஒரு வண்ணஞ் சென்றுபுக்கு எனக்கொன்றுரையொண்கிளியே* என்றவிடத்து ஈட்டில் இந்த சுலோகத்தை யெடுத்து "பாராதே போனுர்களென்கை" என்று பணித்தது அற்புதம்! அற்புதம்!! என்னத்தகும். இதைப்பற்றின விரிவு அந்யத்ர.

**6** (வினு) *மத்பாபமேவாத்ர நிமித்தமாஷத்' என்பது யாருடைய வாக்கியம்? எங்குள்ளது? சொல்ல முடியுமா?

(விடை) *ந மந்தராயா ந ச மரதுரஸ்யா தோஷோ ந ராஜ்ஞோ ந ச ராகவஸ்ய, மத்பாபமேவாத்ர நிமித்தமாஸித் வநப்ரவேசே ரகுநந்தநஸ்ய* என்பது பூர்ண ச்லோகம் இது பரதாழ்வானுடைய வாக்கியம். ஆனுல் ஸ்ரீராமாயணத்தில் கிடையாது. ஆசாரியர்கள் உதாஹரிக்கக் காணுமித்தனை.(திருப்பாவை15*நானேதானுயிடுக.

**7** (வினு) சேதநனுடைய ஸ்மரணமெப்போது? பரமாத்மாவினுடையஸ்மரணமெப்போது? சொல்லமுடியுமா? இது ஸ்ரீராமாயணத்திற் கேள்வியன்று.

(விடை) வராஹசரமச்லோகத்தை உட்கொண்ட கேள்வியென்பதறிவேன் *ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே சரீரே ஸதி யோ நர:, தாதுஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விச்வரூபஞ்ச மாமஜம்; ததஸ் தம் ம்ரியமாணம் து காஷ்டபாஷாணஸந்நிபம், அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் * என்னுமிந்த வராஹசரமச்லோகத்தில் முந்தின ச்லோகத்தில் சேதநனுடைய ஸ்மரணமும். பிந்தினச்லோகத்தில் ஈச்வரனுடைய ஸ்மரணமும் காண்க.

**8** (வினு) *த்வயா ஸஹ* எக்கே? *மயா ஸஹ* எங்கே? *தயா ஸஹ* எங்கே?

(விடை) (1) வநப்ரயாணத்திற்கு முன்பு பெருமாளிடம் பிராட்டி வார்த்தை—*யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயாவிநா* (2 பிறகு சித்திர கூடத்தாழ்வரையில் பெருமாள் பிராட்டியோடு உசாவுகையில் *வைதேஹி! ரமஸே கச்சித்? சித்ரகூடே மயா ஸஹ* என்றுள்ளது. (3) ஸ்தோத்ரரத்நத்தில் *தயாஸஹா ஸீநமநந்த போகிநி......* ஆளவந்தார்.

**9** (வினு) மநஸ்ஸை சலமென்றது யார்? சஞ்சலமென்றது யார்?

(விடை) இது பகவத்கீதையிற் கேள்வியென்று நினைக்கிறேன். (1) (கீதை — 6 34) *சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண! ப்ரமாதி பலவத் த்ருடம், தஸ்யாஹம் நிக்ரஹம்

மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்* என்றான் அர்ஜுனன். அதுகேட்ட கண்ணன் *அஸம்சயம் மஹாபாஹோ! மநோ துர்நிக்ரஹம் சலம், அப்யாஸேந து கௌந்தேய! வைராக்யேண ச க்ருஹ்யதே' என்றான்.

**10** (வினு) ஸௌம்யசக்ஷுஸ்ஸெங்கே? திவ்யசக்ஷுஸ்ஸெங்கே? சொல்லவேணும்.

(விடை) (1) சக்ரவர்த்தி திருமகன் சபரியின் ஆச்ரமத்திற்கு எழுந்தருளின போது அவள் சொன்னவார்த்தை-'சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!' என்று. இங்கு ஸௌம்யசக்ஷுஸ்ஸு. (2) கீதையில் கண்ணபிரான் அர்ஜுநனுக்கு விச்வரூபம் காட்டுவதற்கு முன்னே 'திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம்' என்றான். இங்கு திவ்ய சக்ஷுஸ்ஸு.

**11** (வினு) வால்மீகிமுனிவர் இராமபிரானை விஷ்ணுவாகவே சொன்னது எங்கே? விஷ்ணுபோலேயென்றும், விஷ்ணுவைப் போன்றவனென்றும் சொன்னது எங்கே?

(விடை) (1) அயோத்யாகாண்ட உபக்ரமத்தில் 'ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:' என்றார். இங்கு விஷ்ணுவே ராமனென்றது. (2) கோ நவஸ்மிந் என்று தொடங்கிக் கேள்விகள்கேட்ட வால்மீகி பகவானுக்கு விடையிறுக்கின்ற நாரதமஹர்ஷியின் முகத்தால் 'விஷ்ணுநா ஸத்ருசோ வீர்யே' என்றும், பாலகாண்டமுடிவில் 'தயா ஸ ராஜர்ஷிஸுதோபிராமயா ஸமேயிவாந் உத்தமராஜகந்யயா, அதீவ ராமச் சுசுபேதி காமயா விபுச் ச்ரியா விஷ்ணுரிவாமரேச்வர:' என்றவிடத்தில் தம்வாக்காலும் ராமபிரானுக்கு விஷ்ணுஸாத்ருச்யத்தைச் சொன்னார். "தத்பிந்நத்வே ஸதி தத்கதபூயோ தர்மவத்த்வம் ஸாத்ருச்யம்" ஆகையாலே விஷ்ணுதாதாத்ம்யமும் விஷ்ணுஸாத்ருப்யமும் இராமனுக்குச் சொல்லப்பட்டதாயிற்று.

**12** (வினு) பிராட்டி எதைப் பார்க்கவில்லை? எதைப் பார்த்தாள்? ஒரே ச்லோகத்தினுல் விடை கூறவேணும்.

(விடை) *நைஷா பச்யதி ராக்ஷஸ்ய: நேமாந் பல்லவிதத்ருமாந், ஏகஸ்தஹ்ருதயா நூநம் ராமமேவாநுபச்யதி' [ராக்ஷஸ்ய: என்றது-ராக்ஷஸீ: என்றபடி. ஆர்ஷவ்யத்யயம். அசோகவனத்தில் திருவடி பிராட்டியைக்கண்டபோது சொன்ன வார்த்தை இது. தன்னைத் தர்ஜன பர்த்ஸனங்கள் பண்ணி நலிகிற அரக்கிகளைப் பிராட்டி கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை; தளிரும் முறியுமாய் மநோஹரங்களாய் அங்கே சுற்றுமுள்ள வ்ருக்ஷங்களையும் பார்ப்பதில்லை; சக்ரவர்த்தி திருமகனுரொருவரையே கட்கண்ணாலன்றிக்கே உட்கண்ணால் பாராநின்றாளென்கை. இப்படி பார்க்கிற கண்ணைக்கொண்டுதான் திருவடி பிராட்டியைத் தெரிந்துகொண்டானென்பது நம் ஆசாரியர்களின் பணிப்பு; இதை யடியொற்றியேதான் கம்பர் *கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்* என்றார். இங்கே (கண்களால்) என்றது—தன் கண்களால் என்றபடியன்று; பிராட்டியின் கண்களைக்கொண்டு—என்றபடி. *தஞ்சேயமஸிதேக்ஷணு* என்னப்பட்ட வெளிக்கண்ணையும், *ராமமேவாநுபச்யதி* என்னப்பட்ட உட்கண்ணையும் சேர்த்துக் (கண்களால்) என்றார் கம்பர்.

## — ஆசார்ய திவ்யஸூக்திகளில் ஒரு வினவிடை —

(வினு) *ரக்ஷைகதீக்ஷை ஸாதித்தவர் யார்? ரக்ஷாதீக்ஷை ஸாதித்தவர் யார்?

(விடை) (1) அகிலபுவநஜந்ம...விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷை ஸாதித்தவர் ஸ்ரீபாஷ்யகாரர். (2) *நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது நிஷ்கிஞ்சநஜநஸ்வயம் ரக்ஷாதீக்ஷா ஸமதிக ஸமிந்தாநயசஸே' (அபயப்ரதாந ஸாரே ஸாதித்தவர் தேசிகன்.

## திவ்யப்ரபந்தத்திலும் சுருக்கமாகச் சில வினவிடைகள்

(வினா) ஒன்றுமுதல் பன்னிரண்டுவரையில் லக்கங்கள்வரும் பாசுரங்களைச்சொல்ல வேணும். திருச்சந்த விருத்தத்திலிருந்து மட்டும் பாசுரம் சொல்லக் கூடாது. (இந்த லக்கங்களெல்லாம் ஒரேபாசுரத்தில் காட்டப்படவேணுமென்று கேள்வியின் கருத்தல்ல.)

(விடை.) *ஒன்றெனக்கருள் செய்யவுணர்த்தலுற்றேனே* 'இரண்டு பாடும் துலுங்கா புடைபெயரா எழுது சித்திரங்கள் போல நின்றனவே *மூன்றடி நிமிர்த்து மூன்றினில் தோன்றி மூன்றினில் மூன்றுருவானான்* *நான்கு முகத்தான் நின்னுந்தி முதல்* *ஐந்தினோடைந்தும் வல்லார்* *ஆறினோடொரு நான்குடை நெடு முடியரக்கன்.* துளங்கு நீண்முடி...அங்கோடு நாழிகையேழுடனிருப்ப* *எட்டுத்திசையு மெண்ணிறந்த* 'ஒன்பதோ டொன்றுக்கும் மூவுலகு முருகுமே.* இப்பத்தும் வல்லார்*. *பதினொரு விடையருமிவரோ* பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்ட* சரிதானா?

**2** (வினா)திருநாட்டில் நடக்குங்கதை எந்தஆழ்வார்க்குத் தெரியும்? அக்கதையென்ன?

(விடை) நம்மாழ்வார்க்குத் தெரியும். "சூட்டு நன்மாலைகள் தூயன வேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி" என்கிற திருவிருத்தப்பாசுரத்தில் அக்கதை காண்க.

**3** (வினா) எந்தெந்த திவ்யதேசங்களில் எந்தெந்த அரசர்கள் திருப்பணி செய்தனர்?

[விடை] "தென்னன் தொண்டையர் கோன்-திருவல்லிக் கேணியில்." வயிர மேகன்-அட்ட புயகரத்தில். "பல்லவர் கோன்பணிந்தது-பரமேச்சுர விண்ணகரத்தில். நந்தி பணிசெய்தது-நந்தி புரவிண்ணகரத்தில்."செங்கணான் கோச்சோழன் சேர்ந்தது-திரு அழுந்தூரில். ['திருவுடைமன்னரைக் காணில் திருமாலைக்கண்டேனே யென்னும்' என்கிற திருவாய்மொழிப் பாசுரத்திற்கு இத்தகைய மன்னர்களே இலக்கானவர்கள்.]

**4** [வினா.] எம்பெருமான் விஷயமல்லாத கண்ணிநுண் சிறுத்தாம்பு அருளிச் செயல் நடுவே சேர்ந்தது எங்ஙனம்?

[விடை] உபதேசரத்தின மாலையில் மணவாள மாமுனிகள் *வாய்த்த திருமந் திரத்தின் மத்திமமாம் பதம்போல், சீர்த்த மதுரகவி செய்கலையை-ஆர்த்த புகழாரியர் கள் தாங்கள் அருளிச் செயல்நடுவே சேர்வித்தார் தாற்பரியம் தேர்ந்து*. என்றருளிச் செய்திருப்பது காண்க.

**5** [வினா.] புருஷார்த்தங்களைக் கணக்கிடுகையில் 'தர்மார்த்தகாமமோக்ஷங்கள்' என்று காமத்தையுஞ் சேர்த்துக் கணக்கிட்டது பொருந்துமோ?.

[விடை] திருவரங்கத் தமுதனார் இராமானுச நூற்றந்தாதியில் "சேமநல்வீடும் பொருளும் தருமமும், சீரிய நற்காமமும் என்றிவைநான்கென்பர், நான்கினுங் கண்ணனுக்கேயாமது காமம் அறம்பொருள் வீடிதற் கென்றுரைத்தான் வாமனன் சீலன், இராமானுசனிந்த மண்மிசையே" என்றருளிய பாசுரத்தினால் பொருத்தமறிக.

**6** [வினா.] திருவேங்கடமுடையான் யாருக்கு மந்த்ரோபதேசம் பண்ணினார்? அதை வெளியிட்டவர் யாவர்?

[விடை] பெரிய திருமொழி 5-8-9—*துளங்கு நீண்முடி யரசர்தங்குரிசில் தொண்டை மன்னவன் திண்டிறலொருவற்கு, உளங்கொளன்பினோடின்னருள் சுரந்து அங்கோடு நாழிகையேழுடனிருப்ப, வளங்கொள் மந்திரம் மற்றவற்கருளிச் செய்த வாறடியேனறிந்து....என்று வெளியிட்டவர் திருமங்கை மன்னன்........(தொடரும்)

# ஸ்ரீராமாயணத்தில்-ராமக்ருஷ்ண ஸம்வாதம்

க்ருஷ்ணன்:—ராமா, இன்று ஸ்ரீராமாயணாதிகளில் சில கேள்விகள் கேட்கவிரும்புகிறேன்: கேட்கிறேன். பெருமாள் பித்ருவாக்ய பரிபாலன நிமித்தமாகக் காட்டுக்கெழுந்தருளி சித்திரகூடத் தாழ்வரையிலே இனிது எழுந்தருளியிருந்தபோது ஸ்ரீபரதாழ்வான் அயோத்தியில் சக்ரவர்த்தியின் சரம கைங்கரியத்தை நிறைவேற்றிப் பெருமாளை வனவாஸத்தில் நின்று மீட்டுத் திருவயோத்திக்கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போக ஸபரிவாரனாய் அவ்விடம் வந்து சேர்ந்து தந்தை துஞ்சிய செய்தியைச் சொல்ல; பெருமாள் நெடும்போது மூர்ச்சித்திருந்து பிறகு உணர்ந்தருளி, பிராட்டியையும் இளையோனையும் நோக்கிக் கூறுகின்ற வார்த்தை—*ஸீதே! ம்ருதஸ்தே ச்வசுர: பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண!* என்பதாம். ஸீதே! உன் மாமனார் துஞ்சினார்; இளையா! நீ தந்தையை இழந்தவனாயினை என்றுரையாயிற்று; 'ஐயோ! நம் தகப்பனார் துஞ்சினராமே!' என்றன்றோ ராமன் கதறவேண்டும்; 'ஸீதே! ம்ருதஸ்தே ச்வசுர:' என்று, பிராட்டியை நோக்கிச் சொன்னது ஒருவாறு பொருத்தமாகவே யிருக்கட்டும்; இளையோனை நோக்கி "பித்ரா ஹீநோஸி" என்றது செவ்வைக் கேடாகவன்றோவுள்ளது. சக்ரவர்த்தி தமக்கும் தந்தையாயிருக்க பெருமாள் 'நம் தந்தை துஞ்சினரைப்பா!' என்பதன்றோ முறை; சக்ரவர்த்தியோடு தமக்கு ஒரு ஸம்பந்தமுமில்லைபோல இங்ஙனம் பேசியது என்னே! என்று சங்கிக்கத்தக்கதாகவுள்ளதன்றோ! ராமா! இதற்கு த்ருப்திகரமாக விடைகூற வேணும்.

ராமன்; இதற்குச் சிலர் கூறுவதென்னவென்றால், ராமா! உனக்கு நாளை ராஜ்யம் தருகிறேனென்று சொல்லி வைத்து, காமிநியின் வாக்குக்குக் கட்டுப்பட்டு 'உனக்கு நாடில்லை, காடுதான் போ, என்று சொல்லுவித்து இங்ஙனே கஷ்டங்களையநுபவிக்கச் செய்தவனைத் தமக்குத் தந்தையாகச் சொல்லிக் கொள்ள விரும்பாமையினால் இங்ஙனே சொன்னபடி என்று; மற்றுஞ் சிலர் கூறுவதாவது, (மேலே ஆரண்ய காண்டத்தில்) இளையோன் பஞ்சவடியில் பர்ணசாலை யமைத்த பாங்கைக் கண்டு பெருமாள் போரவுகந்தருளி *பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண!, த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம.* என்று சொல்லி, தம்முடைய தந்தை இறந்திலனென்றும், இளையோனே தமக்குத் தந்தையாகவுள்ளானென்றும் சொல்லுகையாலே அதற்குச் சேர "பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண!" என்றது மிகப் பொருத்தமேயென்று. கண்ணா! இந்த ஸமாதானங்கள் உனக்கு ருசிக்கின்றனவா? சொல்லு.

கிருஷ்ணன்: — இவ்விரண்டு ஸமாதானங்களும் யுக்தமாகத் தோன்றவில்லை ஏனெனில்; பெருமாளுக்குத் தந்தையின்மீது வருத்தமிருந்ததாக வைத்துச் சொல்லும் ஸமாதானம் அநுவதிக்கவும் தகாதது. சக்ரவர்த்தி துஞ்சின செய்தியைப் பரதாழ்வான் சொன்னவுடனே பெருமாள் உள்கலங்கிச் சோகித்துக்கதறியிருக்கும்படிகளைக்கண்டால் பித்ருபக்தியில் பெருமாள் ஈடுமெடுப்புமில்லாதவரென்பது நன்குவிளங்குமே. அன்றியும், பெருமாள் ராவண ஸம்ஹாரம்செய்து தலைக்கட்டிப் புஷ்பகவிமானத்தில் ஏறிச் செல்லுகையில் அயோத்திமாநகர் அணித்தானவாறே 'ஸீதே! இதோ நம்மூர் வந்துவிட்டது' என்று சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் கூறாது *ஏஷா ஸா த்ருச்யதே ஸீதே! ராஜ

தாநீ பிதுர் மம* என்கிறார்; இதோ என் தகப்பனாருடைய ராஜதானி காண்கிறது பார் என்றார். தகப்பனார் துஞ்சிப் பதினான்கு வருஷமாகியும் பெருமாள் திருவுள்ளத்தில் அவருடைய சிந்தனையே குடிகொண்டிருக்கின்றதென்றால் அவரிடத்தில் வெறுப்பு உண்டானதாகச் சொல்லுவது ஒரு வார்த்தையோ? ஆகவே முந்தின ஸமாதானம் ஏலாது. இனிப் பிந்தின ஸமாதானமும் பொருந்தாது. "ந ஸம்வ்ருத்த: பிதா மம' என்னும் வார்த்தையானது 'பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண!" என்ற வார்த்தைக்கு முற்பட்டிருக்குமாகில் ஒருவாறு பொருந்து மென்னலாம். அதுவோ மிகவும் பிற்பட்டது அதைக்கொண்டு இதை ஸமர்த்திப்பது அழகியதன்று. அந்த வார்த்தை பிற்பட்டதா யிருந்தாலும் இளையபெருமாள் அநுசரராக வந்தநாள் முதலாகவே அக்கருத்து பெருமாள் திருவுள்ளத்தில் ஊறியிருக்குமாதலால் அதைக் கொள்ளத் தட்டென்? என்னில்; வேறு சிறந்த ஸமாதானமில்லையாகில் இந்த ஸமாதானத்தைக் கொள்ளலாம். வேறு பொருத்தமான ஸமாதானம் ராமா! உனக்குத்தோன்ற வில்லையா?

ராமன்; ஸ்ரீராம லக்ஷ்மண ஸீதைகளைத் தேரிலேற்றிக் கொணர்ந்த ஸுமந்திரர் கங்கைக் கரையினின்று மீண்டு செல்லப் புறப்படும்போது இளையோனை நோக்கி அப்பா! திருத்தந்தையாரிடம் விஜ்ஞாபிக்க வேண்டிய செய்தி ஏதேனுமுண்டோ? என்று கேட்க அதற்கு அவன் சீறிச் சிவந்த கண்ணினனாய் *அஹம் தாவந்மஹா ராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே, ப்ராதா பர்த்தா ச பந்துச்ச பிதா ச மம ராகவ:* என்றான். இங்கு அஹம், தாவத், மஹாராஜே என்று மூன்று பதமாகப் பிரிக்கலாமாயினும் 'அஹந்தாவந் மஹாராஜே' என்று ஏகபதமாகவே இளையோனுக்கு விவக்ஷித மென்பர். அஹந்தை பிடித்த சக்ரவர்த்தியை நான் பிதாவாகக் கருதவில்லை யென்ற படி. ஏகபதமாகக் கொள்ளாமல் மூன்று பதமாகவே கொண்டாலும் இளையோனுக்குச் சக்ரவர்த்திபக்கலில் மிக்கமனவெறுப்புள்ளதென்பது இதில் நிஸ்ஸந்தேஹமாக விளங்கும். *வன்தாளினிணை வணங்கி வளநகரம் தொழுதேத்த மன்னனாவான் நின்ற பெருமானை 'நெடுங்கானம் படரப்போகு' என்ற பாபியன்றோ அவன்; அவனையா நான் தந்தையாக நினைத்து ஸந்தேசம் விடுப்பது! என்று வெறுத்துரைத்தவனிளையோன். பித்ருபக்தியே வடிவெடுத்த பெருமாள்திருச்செவியிலேபடுமாறு இங்ஙனேசொன்ன வார்த்தை பெருமாளுக்குச் சிறிதேனும் ஸஹ்யமாயிருக்குமோ? இங்ஙனம் சொன்னதற்காக அப்போதே அவனைக் கண்டித்திருப்பர் பெருமாள். ஆனால் அது ஸ்ரீராமாயணத்தில் ஏறியிருக்கவில்லை. ப்ரக்ருத ஸமயத்தில் அவனுக்கு உறைக்கச் சொல்லுகிறார் *பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண!* என்று.

கிருஷ்ணன்;—'லக்ஷ்மணா! நம்முடைய பிதா இறந்து விட்டாரந்தோ!, என்று சொல்லாமல் 'உன்தகப்பனாரை நீ இழந்துவிட்டாய்' என்று பெருமாள் சொன்னதற்கு இளையோன் என்ன சொன்னானென்பதை யறிய விரும்புகிறேன்.

ராமன்; அதுகேட்ட இளையோன் பெருமாளுக்கு என்ன சொல்லியிருக்க வேண்டுமென்றால் அடியேன் ஏற்கெனவே *மஹாராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே* என்றும் *பிதா ச மம ராகவ* என்றும் சொன்னவனாகையாலே என்னுடைய பிதா இறக்கவில்லை காணும் என்று சொல்லி யிருக்க வேண்டும்; அப்படிச் சொல்ல வாய் திறந்திலன்' ஆக, முன்னம் பித்ருபக்தி குலைய நின்று பேசின இளையோனுக்கு மர்மஸ்பர்சியாகச்

சொன்ன வார்த்தை *பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண!* என்பது என்று கொள்ளவேண்டும். இதுவே ஸங்கதமான ஸமாதானம்.

கருஷ்ணன்:—இந்தஸமாதானத்தில் த்ருப்தியடைந்தேன்; மற்ருெருவிஷயம் கேட்கிறேன். பெருமாள் விபீஷண பரிக்ரஹ ஸமயத்தில் அவனைப் பரிக்ரஹிக்கத்தகா தென்று வாதிக்கும் வானரராஜன் விபீஷணுழ்வான் மீது ஒரு பெரிய அவத்யத்தை யெடுத்துக் கூறினன்; தன்னுடன் பிறந்த ராவணன் பெரிய ஆபத்துக்குக் கொள் கலமாயிருக்குந் தருணத்தில் அவனுக்குத் துணைபுரியாதே விட்டிட்டு ஓடிவந்தவிவன் விச்வஸநீயனே? என்றிட்டுக் குறை கூறினன். அப்போது பெருமாளருளிச்செய்த தென்னவென்ருல், *ந ஸர்வே ப்ராதரஸ் தாத! பவந்தி பரதோபமா:* என்பதாம். பரதாழ்வானுக்கு இணையான ப்ராதாக்கள் உலகிலுண்டோ? என்கை. ஸுக்ரீவ மஹாராஜரையும் இளையோனையும் நோக்கி இந்த வார்த்தை பணித்ததாகக் காண்கிறது. ஒழிவில் காலமெல்லாமுடனுய் மன்னி வழுவிலா வடிமை செய்து கொண்டிருக்குமிளையோன் முன்னிலையில் இவன் முகம் கன்றும்படி இப்படியொரு வார்த்தை சொல்லத்தகுமோ? இளையோனிடத்தில் என்ன குறை கண்டு, பரதனிடத்தில் என்ன நிறைகண்டு இங்ஙனே சொன்னுர் பெருமாள்? என்று கேட்கிறேன். (ராமன்)—இதற்குச் சிலர் சொல்லும் ஸமாதானமேதென்னில், "த்வயா த்ரேண தர்மாத்மா நஸம்வ்ருத்த: பிதாமஹ" என்று கீழே உதாஹரித்த பெருமாள் திருவாக்கின்படி இளையபெருமாளுக்கு ப்ராத்ருஸ் தானத்திற்கு மேற்பட்ட பித்ருஸ்தானம் கிடைத்திருக்கையாலே ப்ரக்ருதம் ப்ராதாக்களைப்பற்றின பேச்சில் இளையபெருமாளை புக ப்ரஸக்தியில்லாமையாலே இதனுல் இளையோனுக்கு முகம் கன்றுவதற்கு இடமில்லையென்கிருர்கள்.

க்ருஷ்ண:—இது அசட்டு ஸமாதானம் போல் தோன்றுகிறதடியேனுக்கு.

ராமன்:—உண்மைவாய்ந்ததும் இன்சுவைமிக்கதுமான ஸமாதானம் இதுவென்று. பெருமாள் பரதாழ்வானைக் கொண்டாடிக் கூறியவிது எந்த கெட்டத்திலுள்ள தென்று கவனிக்கவேணும். விபீஷணன் தன் ப்ராதாவினிடத்திலே கடு நெஞ்சு கொண்டதைக் குற்றமாகக் கூறினவிடத்திலுள்ளது. ஸுக்ரீவ மஹாராஜர்க்கும் இளையோனுக்கும் இக்குற்றம் நிரம்பியிருப்பதால் இவ்விருவரையும் தாழ்த்திப் பேசவேண்டிய ஸந்தர்ப்பமிதுவென்றும், இக்குற்றத்திற்கு இறையேனுமிலக்காகாத பரதாழ்வானைப் புகழ்வதற்கும் இதுவே ஸமயமென்றும் திருவுள்ளம் பற்றிய பெருமாள் வெகுசாதுரியமாக அருளிச்செய்தது இது. வாலியாகிய ப்ராதாவை என்னைக் கொண்டு மாள்வித்த ஸுக்ரீவா! நீ பா இந்த வார்த்தை சொல்லுவதற்கு அதிகாரி? என்று அவனை ஏசினது ஒன்று இனி இளையோனைப் பற்றி விரிவாகத் தெரிவிக்கிறேன். பரதாழ்வான் உள்ளடங்காத ஆர்த்தியோடே ஸபரிவாரனுய்ச் சித்திர கூடத்தேற வாரா நின்ருன். அவனது சேனைகளின் ஆரவார மிகுதியைச் செவியுற்ற பெருமாள் இஃது இன்னதென்று விளங்கப்பெருமல் இளையோனையழைத்து 'இது இன்னதென்று தெரிந்துகொள்' என்று நியமித்தருள, அவன் உயரவேறிப் பார்க்கையில் சேனைத் திரளோடு பரதன் வருகிருனென்றறிந்து கொண்டு, தாயையிட்டு நாட்டை விட்டுத் துரத்தின பாவி காட்டிலும் வாழவொட்டாமல் கொலை செய்ய வருகிருனென்று கொண்டு அவ்வண்ணமாகவே பெருமாளிடத்திலும் விண்ணப்பம் செய்கிருன்; *ஸர்வதா வத்ய ஏவாஸௌ* பரதஸ்ய வதே

தோஷம் நாஹம் பச்யாமி ராகவ'* என்று கத்துகிருன். இந்த பிரகரணத்தில் இளை யோன் பேசின பேச்சுக்கள் அநுவதிக்கவும் தகாதவை. ஆயினும் சிறிது கேள் ராமா! பரதன் ராஜ்யாபிஷேகம் பெற்றதோடு த்ருப்தி யடையாமல், நாம் தாயாதிகளாதலால் நம்மால் பிறகு தனக்குக் கஷ்டமேதேனும் விளையக்கூடுமென்றெண்ணி நம்மைக் கொல்ல வந்துகொண்டிருக்கின்றனன்; இதில் சிறிதும் ஐயமில்லை; நீர் சீதையை நோக் கிக்கொள்ளும்; இப்பொழுதே இப்பரதனையும் அவனைச் சேர்ந்தவர்களனைவரையும் ஒரு நொடிப் பொழுதில் கொன்று உமக்கு ராஜ்யாபிஷேகம் செய்விக்கிறேன். இப்பொழுதே அவர்களின் உடல்களை இக்கானகத்தில் திரியும் புலி முதலிய கொடிய விலங்குகள் இழுத்துக் கொண்டு போகும்படி செய்கிறேன் காணீர்; இவ்விடங்களையெல்லாம் குருதி வெள்ளமாக்கி விடுகிறேன் காணீர், என்று பெருமாளிடம் கத்தினனிலக்குமணன்.

க்ருஷ்ணன்;—இப்படியா பேசினுனிளையோன்? காது கொண்டு கேட்க முடிய வில்லையே! இதைப்பெருமாள் எங்ஙனே பொறுத்திருந்தார்? (ராமன்)—இதற்குமேல் பெருமாள் அவனைக் கடிந்துகூறிய வார்த்தைகள் பலபலவுண்டு; அவையிருக்கட்டும். மேலே விவரித்த அபசார மொழிகள் அளவுகடந்தன்றே சென்றிருக்கின்றன, அவை ப்ராத்ருவாத்ஸல்யமுடையவன் சொல்லும் சொற்களல்லவே. இளையோன் பெருமாள் திறத்தில் நல்லெண்ண முடையவனென்பதும், சோர்வு சோம்பலின்றி இரவும் பகலும் தொண்டு புரிபவன் என்பதும் கிடக்கட்டும். பெருமாள் இவற்றை ஒரு பொருளாக மதிப்பவரல்லரே ப்ராத்ருரத்னமாகிய பரதாழ்வானிடத்திலே இவன் ஸஹஜமான அன்பு பொருந்தியவனல்லன் என்று கொண்ட பெருமாளுக்கு இவனிடத்தில் இது பற்றிய அதிருப்தி பெரிதுமுண்டு.

க்ருஷ்ணன்:— அந்த அத்ருப்தியை இன்னமும் சிறிது விவரித்துக்கூறு. ராமன்—மேல் ஆரண்யகாண்டத்திலே ஒருநிகழ்ச்சியைக் கேள்; பெருமாளும் பிராட்டி யம் இளையோனும் கோதாவரியில் ஸ்நானஞ் செய்யச் சிற்றஞ்சிறுகாலையில் எழுந்து செல்லும்போது குளிரின் கனத்தைப் பேசா நின்ற இளையோன் *அஸ்மிம்ஸ்து புருஷ வ்யாக்ர: காலே துக்கஸமந்வித;* *தபச்சரதி தர்மாத்மா த்வத் பக்த்யா பரத: புரே* *சேதே சீதே மஹீதலே* * அத்யந்தஸுகஸம்வ்ருத்தஸ்ஸுகுமாரஸ்ஸுகோசித: * *கதம் ந்வபரராத்ரேஷு ஸரயூ மவகாஹதே* இத்யாதிகளைச் சொல்லிக்கொண்டு பரதாழ்வானை எல்லைகடந்து புகழ்கிருன். இந்தப் புகழ்ச்சியானது கைகேயியை நிந்திப் பதற்கு இட்ட அவதாரிகையே யொழிய வேறில்லை உடனே இத்தகைய குணசாலி யான பரதனுக்கு அப்படுபாவி கைகேயி எங்ஙனம் மாதாவாக வாய்த்தாளோ! என்று அவளை வையத் தொடங்கிவிட்டானிளையோன். அவை கேட்ட பெருமாள் *நதே அம்பா மத்யமா தாத! கர்ஹிதவ்யா கதஞ்சந, தாமேவேக்ஷ்வாகுநாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு'' என்று, 'இளையா! பேருதவி புரிந்தவளான கைகேயியை ஈஷத்தும் வையாதே; பரதாழ்வானுடைய குணங்களையே மேன்மேலும் செவிக்கினிதாகச் சொல்லப்பா!' என்றுர். என்றவளவோடு நில்லாமல் மேலும் பெருமாள் பரதாழ்வானைப்பற்றி அபரிமித மாக வாய் வெருவுகின்ருர். 'இளையா! நான் பித்ருவாக்ய பரிபாலன நிரதனுகையாலே பதினுன்கு வருடம் வனவாஸம் செய்யக் கட்டைப்பட்டவனுயினும் பரதாழ்வானது நன்மைகளை நினைக்குங்கால் இப்போதே புறப்பட்டுத் திரும்பி அயோத்திக்குச்செல்லவும் மதறுகின்றேன் காண்' என்று சொல்லிப் பரதனிடத்துத் தமக்குள்ள அன்பையும்

ஆர்வத்தையும் கனக்கக் காட்டியுள்ளார். இவற்றுக்கெல்லாம் மிக மிக இணங்கவே "ந ஸர்வே ப்ராதரஸ் தாத! பவந்தி பரதோபமா:" என்றனர். இங்ஙனே இளையோன் முன்னிலையிற்சொல்லுவது அவனைத் தாழ்த்தியதாகாதோவென்று பெருமாள் நினைப்பவரல்லர். அவரவர்கள் பக்கலிலே உள்ளபடியுள்ள குணங்களை மறைத்திடாமல் வெளியிடுவதன்றோ உத்தமபுருஷலக்ஷணம். இன்னமும் விரியச்சொல்லுகிறேன் கேளாய்!

உலகில் அவரவர்களுக்கு அமையும் ஏற்றம் ஒரு படிப்பட்டதன்று; பல்வேறு படிப்பட்டிருக்கும். இளைய பெருமாள்படிக்கும் பரதாழ்வான்படிக்கும் நெடுவாசியுண்டென்பது நம் ஆசாரியர்களின் கோஷ்டியில் ப்ரஸித்தம். இளைய பெருமாள் சேஷத்வத்திலே ஊன்றினவர்;. பரதாழ்வான் பாரதந்திரியத்திலே ஊன்றியவர். இளைய பெருமாள் சொன்னசொல் கேளாதவர்; பரதாழ்வான் சொன்னசொல் மீளாதவர். எத்தனையோ மனோரதங்களை உட்கொண்டு சித்திர கூடத்தேறப்போந்த பரதாழ்வானுக்கு ஒருமனோரதமும் ஈடேற வில்லையென்பது சொல்லவேணுமோ? *ஸ காம:மநவாப்யைவ* என்றார் வான்மீகிதாமே. அப்படியிருந்தும் *ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:* என்றும் பேசி வைத்தார் முனிவர். மனோரத பங்கம் பெற்றவர்க்கு ஹர்ஷம் எங்கிருந்து வரும். 'நம்முடைய எந்த மனோரதம் எக்கேடு கெட்டாலும் பாரதந்திரியம் ஜீவிக்கப் பெற்றோமே!' என்றன்றோ பரதாழ்வான் ஹ்ருஷ்டனானது. இந்த ஏற்றத்தை இளைய பெருமாள் ஆசைப்படவுமில்லை, பெறவுமில்லை. பட்டாபிஷேக ஸமயத்திலுங்கூட—"ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யதா ந ஸௌமித்ரிருபைதி யோகம்" என்னும்படியன்றோ இளையோன் ஸ்வாதந்திரியம் கொண்டாடியிருந்தபடி. இதையெல்லாம் இளமையே தொடங்கி நன்கு அறிந்தவரன்றோ பெருமாள். அதனால் அவர் பரதன்பால் வைத்திருந்த கௌரவப்ரதிபத்தியானது பரமவிலக்ஷணமன்றோ. அது சொல்லுவிக்கும் வார்த்தைகள் ஸ்ரீராமாயணத்தில் அபரிமிதமன்றோ.

நெடுநாள் பழகின பெருமாள் சொல்லுவது நிற்க. சற்றுப்போது அநுபவித்த குஹப் பெருமாள் சொன்னவை கேளீர்;

"தாயுரை கொண்டு தாதையுதவிய தரணிதன்னைத்
தீ வினையென்ன நீத்துச் சிந்தனை முகத்திற்றேக்கிப்
போயினை யென்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரமிராமர் நின்கே ளாவரோ தெரியினம்மா"

"என்புகழ்கின்ற தேழையெயினனே னிரவியென்பான்
தன் புகர்க்கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்குமாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்களெல்லாம்
உன்புகழாக்கிக் கொண்டாய் உயர் குணத்துரவுத் தோளாய்'!

என்று குகன் வியந்து புகழ்ந்தவற்றைக் கம்பர் பெருமான் கூறிவைத்தான்.

இளையபெருமாள் தம்பி ஸ்தானத்தைவிட்டுத் தந்தை ஸ்தானத்தில் அமர்ந்தாரென்று சிலர் சொல்லுவதும் சுவையற்றதேயாம். பஞ்சவடியில் ஆச்சரியமாகப் பர்ண

3

சாலேயமைத்த இளேயோன்பால் பெருமாளுடைய திருவுள்ளத்தில் நிகரற்ற உவகை யுண்டாயிற்றென்பது உண்மை. அதனால் அவனைப் பாராட்டிப் பேச வேண்டியது அவசியமாயிற்று. உள்ளன்புடன் தொண்டு செய்வோரை உற்சாகப்படுத்துதற் பொருட்டுப் போரப் பொலியப் புகழ்வது உயர்குணத்தினர்க்கு உற்றது. அந்த முறையில் பெருமாள் "த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம" என்றது மிகச் சிறந்த வார்த்தை. இது கொண்டு பெருமாள் இளேயோனைத் தந்தையாகக் கொண்டு விட்டாரென்னத் தகாது. 'ஆயின் பெருமாள் சொன்னது அஹ்ருதயோக்தியா? என்று ஸஹஸா கேட்டு விட வேண்டா; அஹ்ருதயோக்தியன்று. ஸஹ்ருதயோக்திதான். அதற்கு மரியாதை மீறிப் பொருள் கொள்வது பாங்கன்று. கம்பராமாயண வாலி வதைப் படலத்திலுள்ள "அத்தா இதுகேளென ஆரியன் கூறுவ" என்னுஞ் செய்யுள் ப்ரக்ருதம் எடுத்துக் காட்டுதற்கு மிகவுரியதே; ஆனால் எந்த அம்சத்திற்கு இதனை எடுத்துக் காட்டலாமென்னில், *ந ஸர்வே ப்ராதரஸ்தாத! பவந்தி பரதோபமா:* என்று யுத்த காண்டத்தில் வான்மீகி வாக்கினால் வெளிவந்த பரதப்ரசம்ஸை கிட்கிந்தா காண்டத்தில் கம்பர் வாக்கினால் வெளிவந்தது என்றும், விபீஷணன் திறத்தில் ஸுக்ரீவ மஹாராஜர் கூறிய குறையையே அந்த மஹாராஜர் திறத்திலே முன்பு இளேயோன் கூறியுள்ளான் என்றும் எடுத்துக்காட்ட உறுப்பாமிது. இவ்வழியின் விலகி, பெருமாள் இளேயோனைத் தமக்குத் தந்தையாகக் கொண்டிருக்கும் படியை வான்மீகி வாக்கினாற் பேசுவித்தது போலவே கம்பர் வாக்கினாலும் பேசுவித்தார் காண்மின் என்பதும், முதல் நூலே வழிநூல் பின்பற்றுமழகுக்கு எல்லேயுண்டோவென்பதும் ரஸிகர்கள் மெச்சத் தக்கதாகா.

வடமொழியில் தாத! என்றது கொண்டும், தென்மொழியில் அத்தா! என்றது கொண்டும் இராமன் இளேயோனைத் தந்தையாக விளித்தானென்கை பாஷைச் சுவைக்குச் சிறிது மொவ்வாது. இவை வழுவமைதியின்பாற்படு மத்தனை. பகவத்கீதையில் கண்ணபிரான் அர்ஜுநனை தாத! என்று விளிப்பதைப் பலவிடங்களில் காணலாம்; [6-40] "ந ஹி கல்யாணக்ருத் கச்சித் துர்க்கதிம் தாத! கச்சதி" என்றுளது. இது கொண்டு கண்ணன் அர்ஜுனனைத் தந்தையாகக் கொண்டிருப்பதாய் உரை செய்வாருண்டோ? சிறிய திருமடலில் "வயிறடித்திங்காரார் புகுதுவார் ஐயரிவரல்லால்" என்ற யசோதையின் வார்த்தையை யெடுத்துக்காட்டி "ஐயரென்றால் தந்தை; யசோதை கண்ணபிரானைத் தனக்குத் தந்தையாகக் கொண்டிருந்தாளென்பது இதனால் தெற்றென விளங்கும்" என்று உரை யெழுதுமா போலேயிருப்ப தொன்றாமிது.

"ஸத்ருச: ச்வசுரஸ்ய மே", 'யம் த்ருஷ்ட்வா ராகவோ நைவ வ்ருத்தமார்ய மநுஸ்மரேத்' என்ற பிராட்டி வசனங்களும் இளேயோன் தந்தைபோலவும் தந்தைக்கு மேற்படவும் பெருமானை உபசரிப்பவனென்ற கருத்தைக் காட்டி நிற்குமத்தனை. ஸ்ரீராமாயணந் தன்னிலேயே 'யதா யதாஹி கௌஸல்யா தாஸீவச்ச ஸகீவச, பார்யாவத்பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்டதி' என்கிற சுலோகத்தை நினைப்பூட்டுகிறேனென்று முடித்தான்.

ராமக்ருஷ்ண ஸம்வாத முகத்தினால் காட்டின ஸ்ரீராமாயணரஸ்ய ரஹஸ்யம் முற்றிற்று.



# ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன்.

கண்ணபிரானைப்பற்றி நாலாயிரப் பாசுரங்களில் வருமிடங்களின் குறிப்பு.

## பெரியாழ்வார் திருப்பல்லாண்டு

1. மல்லாண்ட திண்டோள் மணிவண்ணன் (1) 2. மாயப் பொருபடை வாணனை ஆயிரந் தோளும் பொழிகுருதி பாயச் சுழற்றிய ஆழிவல்லான். (7) 3. திரு மதுரையுட் சிலைகுனித் தைந்தலைய பைந்நாகத் தலைப் பாய்ந்தவன். (10)

## பெரியாழ்வார் திருமொழி

வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்க் கண்ணன் (1–1–1) 5 சீருடைப் பிள்ளை, திருவோணத்தான். (1–1–3) 6 ஆயர் புத்திரனல்லாத அருந்தெய்வம், பாயசீருடைப் பண்புடைப் பாலகன் மாயன் (1–1–7) 7 மத்த மாமலைதாங்கிய மைந்தன். (1–1–8) 8 கோதைக்குழலாள் அசோதைக்குப் போத்தந்த பேதைக் குழவி (1-2-1) 9 பணைத்தோளிளவாய்ச்சி பால் பாய்ந்த கொங்கை அணைத்தார வுண்டு கிடந்த பிள்ளை. (1–2–3) 10. உழந்தாள் நறுநெய் ஒரோதடாவுண்ண இழந்தாள் எரிவினால் ஈர்த்தெழில் மத்தின் பழந்தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான். (1–2–4) 11. பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு உறங்குவான் போலே கிடந்த பிள்ளை. [1–2–5] 12. மத்தக்களிற்று வசுதேவர் தம்முடைச் சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில் அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன். [1–2-6] 13. இருங்கைம் மதகளிறீர்க்கின்றவனைப் பருங்கிப் பறித்துக் கொண்டோடும் பரமன் ]1 2–7] 14. வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து தந்தக் களிறுபோல் தானே விளையாடும் நந்தன் மதலை. [1-2-8] 15 பெருமா வுரலில் பிணிப்புண்டிருந்து அங்கிருமாமருதமிறுத்த பிள்ளை. [1-2–10] 16 நாள்களோர் நாலைந்து திங்களளவிலே தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய் வாள் கொள் வளை யெயிற்றுருயிர் வவ்வினான். [1–2 11] 17. மைத்தடங் கண்ணி அசோதை வளர்க்கின்ற செய்த்தலை நீலநிறத்துச் சிறுப் பிள்ளை. [1–2–12] 18 வண்டமர் பூங்குழல் ஆய்ச்சி மகனாகக் கொண்டு வளர்க்கின்ற கோவலக் குட்டன். [1-2–13] 19. நோக்கியசோதை நுணுக்கிய மஞ்சளால் நாக்கு வழித்து நீராட்டும் நம்பி. [1–2–15] 20. வசுதேவர் தம்மகனாய் வந்து திண் கொளசுரரைத் தேய வளர்ந்தவன் [1 2-16] 21 திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற உருவு கரிய ஒளிமணி வண்ணன். [1–2–17] 22. மண்ணும் மலையும் கடலு முலகேழு முண்ணுந் திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளை. [1–2–18] 23. முற்றிலும் தூதையும் முன் கைமேல் பூவையும் சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களைப் பற்றிப் பறித்துக் கொண்டோடும் பரமன் [1-2-19] 24 அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக் கொண்டு கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப மழகன்றினங்கள் மறித்துத் திரிவான். [1-2–20] 25. வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட அஞ்சன வண்ணன் [1–3–10] 26. தன்முகத்துச் சுட்டி தூங்கத்தூங்கத் தவழ்ந்து போய்ப் பொன்முகக் கிண்கிணி யார்ப்பப் புழுதியளைந்தவன் [1–4–1] 27. தாழியில் வெண்ணெய்தடங்கையாரவிழுங்கிய பேழைவயிற்றெம்பிரான். [1-4-9] 29மைத்தடங்கண்ணி

யசோதை தன் மகன் [1-4-10] 29 மேலை யமரர்பதிமிக்கு வெகுண்டு வரக் காள நன் மேகமவை கல்லொடுகார்பொழியக் கருதி வரைக்குடையாக் காலிகள் காப்பவன் [1-5-2] 30 வானவர் தாம் மகிழ வன்சகடமுருள வஞ்ச முலைப்பேயின் நஞ்சமது உண்டவன் [1-5-4] 31 கானக வல்விளவின் காயுதிரக்கருதிக் கன்றது கொண் டெறியும் கருநிறக்கன்று [1-5-4] 32 தேனுகனும் முரனும் திண்திறல் வெந்நரகன் என்பவர்தாம் மடியச் செருவதிரச் செல்லுமானை. [1-5-4] 33. மத்தளவும் தயிரும் வார்குழல் நன்மடவார் வைத்தன நெய் களவால் வாரி விழுங்கி ஒருங்கொதத விணை மருத முன்னிய வந்தவரை ஊருகரத்தினொடு முந்திய வெந்திறலோன் [1-5-5] 34. கானகமாமடுவில் காளியனுச்சியிலே தூய நடம் பயிலும் சுந்தரன் (1-5-6) 35. துங்கமதக்கரியின் கொம்பு பறித்தவன். 36. ஆய மறிந்து பொருவானெதிர்வந்த மல்லை அந்தரமின்றி யழித்தாடிய தாளிணையான். 37. நப்பினை தன்திறமா நல்விடை யேழவிய நல்ல திறலுடைய நாதன். (1-5-7) 38. தப்பின பிள்ளைகளைத் தனமிகு சோதிபுகத் தனியொருதேர் கடவித் தாயொடு கூட்டிய வப்பன். (1) 39. சட்டித் தயிரும் தடாவினில் வெண்ணெய் முண் பட்டிக் கன்று. (1-6-5) 40. மன்னர்படப் பஞ்சவர்க்கன்று தேருய்த்தவன். (1-6-6) 41. புகழ்ப்பலதேவ னென்னும் தன்னம்பி யோடப் பின்கூடச் செல்வான். (1-7-5) 42 மக்களுலகினில் பெய்தறியா மணிக் குழவி யுருவின் தக்கமாமணி வண்ணன் வாசுதேவன். (1-7-8) 43 பஞ்சவர் தூதனாய்ப் பாரதங்கை செய்தவன். 44 நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சன வண்ணன். (1-8-3) 45 நாறிய சாந்தம் நமக்கிறை. நல்கென்னத் தேறியவளும் திருவுடம்பிற் பூச ஊறிய கூனினை யுள்ளேயொடுங்க ஏறவுருவினான். [1-8-4] 46 கழல் மன்னர் சூழக் கதிர் போல் விளங்கி எழலுற்றுமீண்டே யிருந்துன்னை நோக்குஞ் சுழலைப்பெரிதுடைத் துச் சோதனனை யழல விழித்தான். [1-8-5] 47 பூமிப் பொறை தீர்ப்பான் தேரொக்க வூர்ந்தான், காரொக்கு மேனிக் கரும்பெருங்கண்ணன். [1-8-6] 48 தரணியில் வேந்தர்களுட்க விசயன் மணித் திண்டேரூர்ந்தவன். [1-9-4] 49 பொத்தவுரலைக் கவிழ்த்து அதன்மேலேறித் தித்தித்த பாலுந் தடாவினில் வெண்ணெயும் மெத்தத் திருவயிறார விழுங்கிய அத்தன். (1-9-7) 50 மூத்தவை காண முதுமணற் குன் றேறிக் கூத்துஉவந்தாடிக் குழலாலிசைபாடி வாய்த்த மறையோர் வணங்க இமையவ ரேத்த நின்றவெம்பிரான். [1-9 8] 51 கற்பகக்காவு கருதிய காதலிக்கு இப்பொழு தீவனென்றிந்திரன் காவினில் நிற்பன செய்து நிலாத்திகழ் முற்றத்துளுய்த்தவன். [1-9 9] 52 மெச்சூது சங்கமிடத்தான் நல்வேய்ஊதி பொய்ச் சூதில் தோற்ற பொறையுடை மன்னர்சகாய்ப் பத்தூர் பெருதன்று பாரதங் கைசெய்தவத்தூதன். [2-1-1] 53 மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலை வளையத் திண்தேர் மேல் முன்னின்றான். [2 1-2] 54 காயுநீர்புக்குக் கடம்பேறிக் காளியன் தீய பணத்தில் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி வேயின் குழலூதி வித்தகனாய் நின்ற ஆயன். (2-1-3) 55 இருட்டில் பிறந்து போயேழை வல்லாயர் மருட்டைத் தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப் புரட்டியவன். 56 அந்நாளாய்ச்சியர் பூம்பட்டுக் கொண்ட வரட்டன். [?-1-4] 57 நந்தன் மனைவி கடைதாம்பால் சோப்பூண்டு துள்ளித்துடிக்கத் துடிக்க அப்பூண்டான். [2-1-5] 58 துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய அப்பன். [2-1-5] 59 அசோதை இளஞ்

# சென்னை லிங்கச் செட்டி தெரு, ஸ்ரீ வேணுகோபாலஸ்வாமி கோயில் நூதன திருமாமணி மண்டப ஸம்ப்ரோக்ஷணம்



4-9-77ல் நடந்த ஷை வைபவத்துக்கு ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீமத் பரமஹம்ஸ யதீந்திர ப்ரவண ஸ்ரீயதிராஜ ஜீயர் ஸ்வாமியை உபயகார் ஸ்ரீ P. B. அனந்தாச்சாரியர் வேதகோஷ்டியுடன் வரவேற்கும் காட்சி.



ஷை மண்டபத்தின் சுவரில் பதிக்கப்பட்ட சலவைக்கல் சாஸனத்தை ஷை ஜீயர் ஸ்வாமி திறந்து உபயகாரருடன் மாலை மரியாதை பெற்று நிற்கும் காட்சி.

# ஸ்ரீவேணுகோபால ஸ்வாமி தேவஸ்தானம்

***134, லிங்கிச் செட்டி தெரு, சென்னை-1.***

ஷை கோயிலின் முன்பக்கம் பல காலமாகத் திறந்தவெளியாயிருந்த இடத்தில் அழகானதோர் மண்டபம் நிர்மாணிக்கப்பட்டு சென்ற 4—9—1977ம் தேதி ஞாயிறு விடியற்காலை 'ஸம்ப்ரோக்ஷணம்' வெகு விமரிசையாக நடந்தேறியது. ஸ்ரீமதுபயவே, சென்னை அட்வகேட் P. B. அனந்தாச்சாரியரும் அவரது நண்பர்களுள் ஒருவரான ராமனுதபுரம் திரு. T. சூசை உடையார் அவர்களும் சேர்ந்து இந்தத் திருப்பணியை பிரதியேகமாய்ச் செய்து முடித்தனர். சென்னை முத்தியாலுபேட்டை 'தெய்வீக சுயம் ஸேவா சங்கத்தார்' (D. V. C.) நான்கு ஸம்வத்ஸரங்களாக ஷை ஸந்நிதியில் பஞ்சபர்வம், வெள்ளிக்கிழமை தினங்களில் உள்புறப்பாடு கைங்கரியத்தில் ஈடுபட்டு வருவதாலும் அச்சங்கத்தின் தலைவராய் ஷை உபயகாரர் ஸ்ரீ P. B. அனந்தாச்சாரியர் ஸ்வாமிகள் இருந்து வருவதாலும் அதன் அங்கத்தினர் பலர் ஷை கைங்கரியத்தில் பல வித ஸேவைகள் புரிந்து ஸத்தைபெற்றார்கள்.

ஷை ஸம்ப்ரோக்ஷண வைபவத்துக்குப் பூர்வாங்கமாக 1—9—67 வியாழன் இரவு அங்குரார்ப்பணம், தேவதா ஆவாஹனம், ஆசார்யவரணம் முதலான கிரியைகளும், அடுத்த வெள்ளி சனிக்கிழமைகளில் காலையிலும் இரவிலும் யாகம், ஹோமம், திவ்யப்ரபந்தஸேவை, சாற்றுமுறை, வேதபாராயணம்.........ஆகிய வழிபாடுகளும் கிரமப்படி நடந்தன. வெள்ளிக்கிழமை (2-9-77) ஸ்ரீ உ வே. வித்வான் வேளுக்குடி வரதாச்சார்ய ஸ்வாமி, 'கைங்கர்யம்" என்ற விஷயமாய் உபந்யசித்து, மண்டப அமைப்பை சிலாகித்து கிங்கரர்களை ஊக்குவித்தார் மறுநாள் (3—9—77) ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாண உற்சவத்தை முத்தியாலுபேட்டை பஜனகோஷ்டியார் சங்கீத பாணியில் நடத்திவைத்தார்கள். ஸ்ரீமதுபயவே பிள்ளைலோகம் பாஷ்யகாரார்ய ஸ்வாமியும் ஸ்ரீமதுபயவே காரப்பங்காடு ரங்கராஜ அய்யங்கார் ஸ்வாமியும் யாத்ருச்சிகமாக எழுந்தருளி மங்களாசாஸனம் செய்தது ஒரு விசேஷம்

ஸம்ப்ரோக்ஷணம் முடிந்த பிறகு நடைபெற்ற ஸேவை சாற்றுமுறைக்கும் திருமஞ்சன விசேஷத்துக்கும் 'ஸ்ரீபெரும்பூதூர் பரமஹம்ஸ பரிவ்ராஜக யதீந்திரப்ரவண ஸ்ரீ ஸ்ரீ. எதிராஜஜீயர் ஸ்வாமி' எழுந்தருளி இருந்து கோஷ்டியை அலங்கரித்தது இந்த வைபவத்துக்கே ஒரு தனிச்சிறப்பாக அமையப்பெற்றது. அதுசமயம் ஷை ஜீயர் ஸ்வாமி நூதன மண்டபச் சுவரில் பதிக்கப்பட்ட சலவைக்கல் சிலாசாஸனத்தைத் திறந்து வைத்து உபயகாரருக்கு ஆசி வழங்கினர் ஜீயர் ஸ்வாமியை (வேத கோஷ்டியாருடன்) பூர்ணகும்ப மரியாதையுடன் ஸந்நிதிக்குள் வரவேற்பு அளித்த போதும் அவர் ஷை சிலாசாஸனத்தைத் திறந்துவைத்தபோதும் எடுத்த இரு புகைப் படங்களைப் பக்க ஏட்டில் கண்டுகளிக்கவும் அன்றிரவு நடந்த பெருமாள் திருவீதிப் புறப்பாடு உற்சவம் ஷை D. V. C. சங்கத்தார் சுய ஸேவார்த்தமாய் நடத்திவைத்தனர். ஷை கைங்கரியங்கள் யாவற்றையும் மாதகாலத்தில் செவ்வனே முடித்து கண்ணன் க்ருபா கடாக்ஷத்துக்கு பாத்திரர்களான பக்தர்களுக்கு நாமும் ஆசிகூறுகிறோம்.

இப்படிக்கு, **தேவராஜய்யங்கார்**

ஸர்வே ஜநாஸ் ஸுகிநோ பவந்து.

சிங்கம். கொத்தார் கருங்குழல் கோபாலகோளரி அத்தன். (2-1-7) 60 கஞ்சனை வஞ்சனையால் வலைப்படுத்தினான். (2-2 3 61 இருமலை போலெதிர்ந்த மல்லரிருவர் அங்கமெரிசெய்தான். (2-2-8) 62 பேய்ப்பால் முலையுண்ட பித்தன். (2 3-1) 63 மலையையெடுத்து மகிழ்ந்து கன்மாரி காத்துப் பசு நிரை மேய்த்தான். (2-3-7) 64 ஏர்விடை செற்றிளங்கன் றெறிந்திட்ட இருடீகேசன். (2-3-10) 65 சகட முதைத்திட்ட பற்பநாபன். [2-3-11] 66 முன்வஞ்சமகளைச் சாவப் பாலுண்டு சகடிறப்பாய்ந்திட்ட தாமோதரன் [2-3-12] 67 கஞ்சன் புணர்ப்பினில் வந்த கடிய சகட முதைத்து வஞ்சகப் பேய்மகள் துஞ்ச வாய் முலைவைத்த பிரான். [4-4-4] 68 எண்ணெய்க்குடத்தைபுருட்டி இளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக் கண்ணைப் புரட்டி விழித்துக் கழைகண்டு செய்யும் பிரான். [2-4-6] 69 கன்றினை வாலோலை கட்டிக் கனிகளுதிர வெறிந்து பின்தொடர்ந் தோடியோர் பாம்பைப் பிடித்துக் கொண்டாட்டினான். [2-4-7] 70 பேயின் முலையுண்டபிள்ளை, மாயச்சகடும் மருதுமிறுத்தவன். (2-5-2) 71 திண்ணக்கலத்துத் திரையுறிமேல் வைத்த வெண்ணெய் விழுங்கி விரையவுறங்கிடு மண்ணலமரர் பெருமான். (2-5-3) 72 பள்ளத்தில் மேயும் பறவையுருக்கொண்டு கள்ளவசுரன் வருவானைத் தான் கண்டு புள்ளிது வென்று பொதுக்கோ வாய்கீண்டிட்ட பிள்ளை. (2 5 4) 73 கற்றினம் மேய்த்துக் கனிக்கொரு கன்றினைப் பற்றியெறிந்த பரமன். (2-5-5 74 கிழக்கிற் குடிமன்னர் கேடிலாதாரை யழிப்பான் நினைந்திட்டு அவ்வாழியதனால் விழிக்கு மளவிலே வேரறுத்தான். (2-5-6 75 வேலிக் கோல் வெட்டி விளையாடு வில்லேந்தித் தாலிக்கொழுந்தைத் தடங்கழுத்திற் பூண்டு பீலித்தழையைப் பிணைத்துப் பிறகிட்டுக் காலிப்பின் போவான். (2-6-1) 76 கறுத்திட்டெதிர் நின்ற கஞ்சனைக் கொன்றான், பொறுத்திட் டெதிர்வந்த புள்ளின் வாய்கீண்டான், நெறித்த குழல்களை நீங்க முன்னோடிச் சிறுக்கன்று மேய்ப்பான். (2-6-3) 77 ஒன்றே யுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான். பாரதங் கையெறிந்தான் (2-6 4 78 பாரதங் கைசெய்து பார்த்தற்குத் தேரொன்றை யூர்ந்தான் (2 6-4) 79 பாலப் பிராயத்தே பார்த்தற்கருள் செய்த கோலப்பிரான். (2 6-6 80 தேனிலினிய பிரான். (2-7-1) 81 மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்வான். (2 7 3) புள்ளினை வாய் பிளந்திட்டான். பொருகரியின் கொம்பொசித்தான். (2 7 5) கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக் கால் கொடு பாய்ந்தான், தெருவின்கண் தீமைகள் செய்து சிக்கென மல்லர்களோடு பொருது வருகின்ற பொன். (2-7-6) குடங்களெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்லகோ. மடங்கொள் மதிமுகத்தாரை மால் செய்யவல்ல மைந்தன் (2 7 7) சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லான். சாமாறவனை யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டான். (2 7 8 கள்ளச் சகடும் மருதும் கலக்கழிய உதை செய்த பிள்ளையரசு. (2 8 7) கஞ்சன் கறுக்கொண்டு வஞ்சிப்பதற்கு விடுத்த கருநிறச் செம்மயிர்ப் பேயைப் பிடித்து முலையுண்ட பரமன் (2 8 6, 2 8 7) கும்பக் களிறட்டகோ. கொடுங்கஞ்சன் நெஞ்சினில் கூற்று. (2 7 8) வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசை கேட்கும் கண்ணபிரான். (2 9 1) 90 வளைதுகில் கைக்கொண்டு காற்றிற்கடியனுயோடியகம்புக்கு மாற்றமும் தாரான். (1 10 2 வண்டமர் பூங்குழலார் துகில்கைக்கொண்டு விண்டோய் மரத்தான்

(1 10 2) தடம்படு தாமரைப் பொய்கை கலக்கி விடம்படு நாகத்தை வால்பற்றியீர்த்துப் படம்படு பைந்தலை மேலெழப் பாய்ந்திட்டு உடம்பையசைத்தான். (2 10 3) தேனுகனுவி செகுத்துப் பனங்கனி தானெறிந்திட்ட தடம் பெருந் தோளினால் வானவர் கோன் விடவந்த மழைதடுத்து ஆனிரை காத்தான் (2 10 4) ஆய்ச்சியர்சேரி அளைதயிர் பாலுண்டு பேர்த்தவர் கண்டுபிடிக்கப் பிடியுண்டு வேய்த்தடந் தோளினார் வெண்ணெய் கொள்மாட்டாதங் காப்புண்டிருந்தான் (2 1 05) தள்ளித் தளர்நடையிட்டிளம் பிள்ளையாய் உள்ளத்தினுள்ளே அவளையுற நோக்கிக் கள்ளத்தினால் வந்த பேய்ச்சி முலையுயிர் துள்ளச் சுவைத்தான். (2 10 6) தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடை யிட்டு வருவான் பொன்னேய் நெய்யொடு பாலமுதுண்டு ஒரு புள்ளுவன் பொய்யே தவழும் மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கை துஞ்ச வாய் வைத்த பிரான். [3 1 1] வன்பாரச்சகட மிறச்சாடி வடக்கிலகம்புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்து வைத்த அன்பன். (3 1 2) கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கிக் குடத்தயிர் சாய்த்துப் பருகிப் பொய்ம்மாய மருதான அசுரரைப் பொன்றுவித்தான். 3 1 3) மையார் கண் மடவாய்ச்சியர் மக்களை மையன்மை செய்து அவர்பின் போய்க் கொய்யார் பூந்துகில் பற்றித் தனிநின்று குற்றம் பலபல செய்தான். [3 1 4] 100 முப்போதும் கடைந்தீண்டிய வெண்ணெயினோடுதயிரும் விழுங்கிக் கப்பாலாயர்கள் காவிற் கொணர்ந்த கலத்தொடு சாய்த்துப் பருகி மெய்ப்பாலுண்டழு பிள்ளைகள் போல விம்மி விம்மி யழுகின்றவப்பன். [3-1-5] கரும்பார் நீள்வயல் காய்கதிர்ச் செந்நெலைக் கற்றாநிரை மண்டித் தின்ன விரும்பாக் கன்றொன்று கொண்டு விளங்கனி விழவெறிந்த பிரான். [3-1-6] சுரும்பார் மென் குழல் கன்னியொருத்திக்குச் சூழ்வலை வைத்துத் திரிபுமரம்பன் [3-1-6] சுருட்டார் மென்குழல் கன்னியர் வந்து சுற்றுந்தொழ நின்ற சோதி. [3-1-7] பிறர் மக்களை மையன்மை செய்து தோளாலிட்டவரோடு திளைத்துச் சொல்லப் படாதன செய்தான் [3-1-8] காய்வார்க்கென்று முகப்பனவே செய்து கண்டார் கழறத்திரியு மாயன். [3-1-9] தொத்தார் பூங்குழல் கன்னியொருத்தியைச் சோலைத் தடங்கொண்டு புக்கு முத்தார் கொங்கை புணர்ந்து இராநாழிகை மூவேழு சென்றபின் வந்தான் [3-1-10] அஞ்சன வண்ணன். ஆயர் கோலக் கொழுந்து. [3-2-1] பற்று மஞ்சள் பூசிப் பாவை மாரொடு பாடியில்சிற்றில்சிதைத்தெங்கும் தீமைசெய்து திரிவான் [3-2-2] நன்மணி மேகலை நங்கைமாரொடு நாள்தொறும் பொன் மணி மேனி புழுதியாடித் திரிவான் [3-2-3] 110 வண்ணக் கருங்குழல் மாதர்வந்தலர் தூற்றிடப் பண்ணிப்பல செய்து ஆய்ப்பாடி யெங்கும் திரிவான். [3-2-4] அவ்வவ்விடம் புக்கு அவ்வாயர் பெண்டிர்க் கணுக்கனாய்க் கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்வான் [3-2-5] மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப் போய்ப் படிறு பல செய்து ஆய்ப்பாடி யெங்குந்திரிவான். [3-2-6] வள்ளி நுடங்கிடைமாதர் வந்தலர் தூற்றிடத் துள்ளி விளையாடித் தோழரோடு திரிவான் [3-2-7] பன்னிருதிங்கள் வயிற்றில் கொண்டவப் பாங்கினால் அசோதை யமுதூட்டி யெடுத்த இளஞ்சிங்கம் [3-2-8] குடையும் செருப்பும் கொடாதே கடிய வெங்கானிடைக் காலடி நோவக் கன்றின் பின் போக்கிய பிள்ளை. [3-2-9] பேடைமயிற் சாயல் பின்னைமணாளன் [3-3-3] பற்றார் நடுங்க முன் பாஞ்சசன்னியத்தை வாய்வைத்த பேரேறு (313-5) பொய்கைபுக்கு நஞ்சு

மிழ் நாகத்தினேடு பிணங்கினன். (3-3-6) கன்றினுருவாகி மேய்புலத்தே வந்த கள்ளவசுரன் தன்னைச் சென்று பிடித்துச் சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தான். (3-3-7) 120 கோவலரிந்திரற்குக் காட்டிய சோறும் கறியும் தயிரும் கலந்துடனுண்டான். (3-3-8) அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறும் அடங்கப் பொட்டத்துற்றி மாரிப்பகை புணர்த்த பொருமாகடல் வண்ணன். (3-5-1) செப்பாடுடைய திருமாலவன் (3-5-6) தடங்கை விரலைந்தும் மலர வைத்துத் தடவரை தாங்கு தாமோதரன். (3-5-7) வன்பேய் முலைபுண்டதோர் வாயுடையயன். (3-5-9) வானிளவரசு வைகுந்தக் குட்டன் வாசுதேவன் மதுரை மன்னன் நந்தர் கோனிளவரசு கோவலர் குட்டன் கோவிந்தன். (3-6-3) தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப் பூடுகளடங்கவுழக்கிக் கானகம்படியுலாவி யுலாவிக் குழலூதின கருஞ் சிறுக்கன். 3 6 4) செம்பெருந்தடங் கண்ணன் திரடோளன் தேவகி சிறுவன் தேவர்கள் சிங்கம். (3 6 6) அருங்கலவுருவினுயர் பெருமான். (3 6 10) மல்லரையட்டவன். (3 8 1) 130 சாடிறப் பாய்ந்த பெருமான். (3 8 6) நந்தகோபன் மகன் கண்ணன். (38 8) என்னுதன் தேவிக்கு அன்றின்பப் பூவீயா தாள் தன்னுதன் காணவே தண்பூமரத்தினை வன்னுதப் புள்ளால் வலியப்பறித்திட்ட என்னுதன். [3 9 1) உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு விருப்புற்றங்கேக விரைந்தெரிர் வந்து செருக்குற்றான் வீரஞ்சிதையத் தலையைச் சிரைத்திட்டான். (3 9 3 பஞ்சவர் தூதனுய்ப் பாரதங்கை செய்து நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சனவண்ணன். [3 9 5] காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன் நீண் முடியைந்திலும் நின்றுநடஞ் செய்து மீளவவனுக்கருள் செய்தவித்தகன். 3 9 7] மாயச்சகடமுதைத்து மருதிறுத்து ஆயர்களோடு போய் ஆநிரைகாத்து அணிவேயின் குழலூதி வித்தகனுய் நின்ற ஆயர் களேறு (3-9-9) கொலையானைக் கொம்பு பறித்தான் (4-1-3) ஆயர்மடமகள் பின்னைக்காகி அடல்விடை யேழினையும் வீயப்பொருது வியர்த்து நின்றான் (4 1-4) வாரேறு கொங்கை யுருப்பிணியை வலியப் பிடித்துக் கொண்டு தேரேற்றிச் சேனை நடுவுபோர் செய்தான். [4-1-5] 140 பொல்லா வடிவுடைப் பேய்ச்சிதுஞ்சப் புணர் முலை வாய்மடுக்க வல்லான். பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை எல்லாரும் குழச்சிங்காசனத்தே யிருந்தான் (4.1.6)வெள்ளைப் புரவிக்குரக்கு வெல்கொடித் தேர்மிசை முன்பு நின்று கள்ளப்படைத் துணையாகிப் பாரதம் கைசெய்தான். (4.1.7) நாழிகைபோகப்படை பொருதவன் தேவகிதன் சிறுவன். ஆழிகொண்டு அன்று இரவி மறைப்பச்சயத்திரதன் தலையைப் பாழிலுருளப் படை பொருதவன். [4-1-8] அனுயர் கூடியமைத்த விழவை அமரர்தம் கோனுர்க் கொழியக் கோவர்த்தனத்துச் செய்தான் ( .2.1)கஞ்சன் தன் ஒருவாரண முயிருண்டவன். [4-2-5]ஏவிற்றுச் செய்வான் ஏன்றெதிர்ந்து வந்த மல்லரைச் சாவத்தகர்த்த சாந்தணிதோள் சதுரன். [4-2-6]மன்னர் மறுக மைதுனன்மார்க்கொரு தேரின்மேல் முன்னங்கு நின்று மோழை யெழுவித்தவன். [4-2-7] எட்டுத் திசையுமெண்ணிறந்த பெருந்தேவிமார் விட்டுவிளங்க வீற்றிருந்த விமலன். [4-2-10] உருப்பிணிநங்கை தன்னை மீட்பான் தொடர்ந்தோடிச் சென்ற வுருப்பனை யோட்டிக் கொண்டிட்டுறைத்திட்ட வுறைப்பன். [4-3 1] கஞ்சனும் காளியனும் களிறும் மருது மெருதும் வஞ்சனையில் மடிய வளர்ந்த மணிவண்ணன்

[4-3-2] 150 மன்னுநரகன் தன்னைச் சூழ்போகிவளைத்தெறிந்து கன்னி மகளிர் தம்மைக் கவர்ந்த கடல் வண்ணன். [4-3-3] மாவலி தன்னுடைய மகன் வாணன் மகளிருந்த காவலைக் கட்டழித்த தனிக்காளை. [4-3-4] பலபல நாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன் தன்னை அலவலைமை தவிர்த்த வழகன். [4-3-5] பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்க மெல்லாம் ஆண்டங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்தவப்பன். [4-3-6] குருந்தமொன் றொசித்தான். (4-4-7) சாடிறப்பாய்ந்த தலைவன், தாமோதரன். [4-6-6] கண்ணுக்கினிய கருமுகில் வண்ணன். [4-6-7] செம்பெருந் தாமரைக் கண்ணன் (4-6-8) தலைப்பெய்து குமுறிச் சலம் பொதிமேகஞ் சலசல பொழிந்திடக் கண்டு மலைப்பெருங்குடையால் மறுத்தவன், மதுரைமால். (4-7-6) விற்பிடித்திறுத்து வேழத்தை முறுக்கி மேலிருந்தவன் தலைசாடி மற்பொரு தெழப் பாய்ந்தரையனை யுதைத்தமால். (4-7-7) 160 திரைபொரு கடல்சூழ் திண் மதிள் துவரை வேந்து, தன் மைத்துனன்மார்க்காய் அரசினையவிய அரசினையருளுமரி (4-7-8) மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல் வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையாவுருவுருவே கொடுத்தான். [4-8-1] பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளை களை நால்வரையும் இறைப்பொழுதில் கொணர்ந்து கொடுத்து ஒருப்படுத்த வுறைப்பன். [4-8-2] மருமகன்றன் சந்ததியை யுயிர்மீட்டு மைத்துனன் மார் உருமகத்தே வீழாமே குருமுகமாய்க் காத்தான். (4-8-3) கருளுடைய பொழின் மருதுங் கதக்களிறும் பிலம்பனையும் கடியமாவும் உருளுடைய சகடரையும் மல்லரையு முடைய விட்டோசை கேட்டான். (4 9-3) பதினாறுமாயிரவர் தேவிமார் பணி செய் யத் துவரையென்னுமதில் நாயகராகி வீற்றிருந்த மணவாளர். (4-9 5) மைத்துனன் மார் காதலியை மயிர்முடிப்பித்து அவர்களையே மன்னராக்கி உத்தரைதன் சிறுவனையு முய்யக் கொண்டவுயிராளன் (4 9 6) குன்றெடுத்தா நிரைகாத்த ஆயன், கோநிரை மேய்த்தவன் (4 10 9) கொடுமைக் கஞ்சனைக்கொன்று தன் தாதை கோத்த வன் தளை கோள் விடுத்தான் (5 1 4) குஞ்சரம் வீழக் கொம்பொசித்தான். (5 1 5) 170 வண்ணமால் வரையே குடையாக மாரிகாத்தவன். கனிறட்ட பிரான் [5-1-9] மக்களறுவரைக் கல்லிடைமோதவிழந்த வள்தன் வயிற்றில் சிக்கென வந்து பிறந்து நின்றான். 5 0 1 தூது சென்றான் குருபாண்டவர்க்காய் அங்கோர் பொய்ச்சுற்றம்பேசிச் சென்று பேதஞ் செய்தெங்கும் பிணம்படுத்தான். 5 3 5 மைத்துனன்மார்களை வாழ் வித்து மாற்றலர் நூற்றுவரைக் கெடுத்தான். 5 3 9 சென்றங்கு வாணனையாயிரந் தோளுந் திருச் சக்கரமதனால் தென்றித் திசை திசை வீழச்செற்றான். 5 3 10 மருப் பொசித்தான், மல்லடர்த்தான் 5 4 7 வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலன், கொழுங்குளிர் முகில்வண்ணன், ஆயரேறு 5 4 11 திருப்பாவை = கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்; ஏரார்ந்த கண்ணி யசோதையிளஞ்சிங்கம்; கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான். 1 மாயன்; மன்னு வடமதுரை மைந்தன்; தூயபெருநீர் யமுனைத் துறைவன்; ஆயர் குலத்தினில் தோன்றுமணி விளக்கு; தாயைக் குடல் விளக்கஞ் செய்த தாமோதரன். 5 பேய் முலை நஞ்சுண்டு கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி வெள்ளத்தரவில் துயி லமர்ந்த வித்து. 6 180 மாவாய் பிளந்தான்; மல்லரை மாட்டிய தேவாதி தேவன். 8 புள்ளின் வாய் கீண்டான். 13 சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன், பங்கயக்கண்

ணன். 14 வல்லானை கொன்றான்; மாற்றாரை மாற்றழிக்க வல்லான்; மாயன். 15 குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில் மேல் மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக் கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பன். 19 வள்ளல் பெரும் பசுக்களாற்றப் படைத்தான் மகன். 21 பொன்றச் சகடமுதைத்தான்; கன்று குணிலாவெறிந்தான், குன்று குடையா வெடுத்தான். 24 ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்து வளரத் தரிக்கிலானாகித் தான் தீங்கு நினைந்த கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமால். 25 கூடாரை வெல்லுஞ் சீர்க்கோவிந்தன். 27 குறைவொன்று மில்லாத கோவிந்தன். 28 190 பெற்றம் மேய்த்துண்ணுங் குலத்தில் பிறந்தவன். 29

## நாச்சியார் திருமொழி

ஓர்கரியலற மருப்பினை யொசித்துப் புள்வாய் பிளந்த மணிவண்ணன் (1-10) குதிகொண்டரவில் நடித்தான் (3 2) குடத்தையெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்ல எங்கோ. (3 6) கோமளவாயர் கொழுந்து (3-8) கஞ்சன் வலை வைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து நெஞ்சுதுக்கஞ் செய்யப்போந்தான், வஞ்சகப் பேய்ச்சி பாலுண்டமசுமையிலி (3-9) அணிவாணுதல் தேவகிமாமகன்; மிகுசீர் வசுதேவர் தங்கோமகன் (4-3) ஆய்ச்சிமார்களு மாயருமஞ்சிடப் பூத்த நீள்கடம்பேறிப் புகப் பாய்ந்து வாய்த்த காளியன் மேல் நடமாடிய கூத்தன் (4-4) ஓடைமாமத யானை யுதைத்தவன் (4-5) மருத முறிய நடை கற்றவன், கஞ்சனை வஞ்சனையில் செற்றவன், திகழும் மதுரைப் பதிக்கொற்றவன் (4 6) 200 அன்றின்னாதன செய் சிசுபாலனும் நின்ற நீள் மருதுமெருதும் புள்ளும் வென்றிவேல விறற்கஞ்சனும் வீழ முன் கொன்றவன் (4-7) ஆவலன்புடையார் தம் மனத்தன்றி மேவலன்; விரைசூழ் துவராபதிக்காவலன்; கன்று மேய்த்து விளையாடுங் கோவலன் (4-8) அணியாச்சியர் சிந்தைபுள் குழகனார் (4-10) மதுரையார் மன்னன் (6-5) மருப்பொசித்த மாதவன் (7-1) வடமதுரையார் மன்னன்; வாசுதேவன் (7-3) செங்கட்கருமேனியன் (7-7) கண்ணாலங்கோடித்துக் கன்னி தன்னைக் கைப்பிடிப்பான் திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து அண்ணாந்திருக்கவே யாங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன் (11-9) கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகன் (12-3) நீர்க்கரை நின்ற கடம்பை யேறிக் காளியனுச்சியில் நட்டம் பாய்ந்து போர்க்களமாக நிருத்தஞ் செய்தான் (12-3) 210 பத்தவிலோசனத்து வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போதீதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்வான் (12-6) கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப் பெற்றான், காடுவாழ் சாதியுமாகப் பெற்றான், பற்றியுரலிடை யாப்புமுண்டான், காலிகளுய்ய மழை தடுத்துக் கோவர்த்தனங் கொற்றக்குடையாக வேந்தி நின்றான் (12-8) கண்ணனென்னுங் கருந்தெய்வம் (13-1) கோலால் நிரை மேய்த்த ஆயன் (13-2) கஞ்சைக்காய்ந்த கருவில்லி (13 3) ஆயர்பாடி கவர்ந்துண்ணுங்காரேறு (13-4) தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே குழலூதி வருகின்ற நெடுமால் (13-5) நந்தகோபன் மகனென்னுங் கொடிய கடியதிருமால் (13-6) கொள்ளை கொள்ளிக் குறும்பன், கோவர்த்தனன் (13-8) அல்லல் விளைத்த பெருமான்; ஆயர்பாடிக் கணிவிளக்கு (13-10) 220 பட்டிமேய்ந்தோர் காரேறு; பல

தேவர்க்கோர் கீழ்க்கன்று, இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி விட்டுக் கொண்டு விளையாடுவான் (14-1) ஆயர்பாடி கவர்ந்துண்ணும் குணுங்குநாறும் குட்டேறு; கோவர்த்தனன் (14-2) மாலாய்ப் பிறந்த நம்பி; மாலேசெய்யும் மணாளன் ஏலாப் பொய்களுரைப்பான் (14-3) போர்த்த முத்தின்குப்பாயப் புகர்மால் யானைக் கன்றேபோல் வேர்த்து நின்று விளையாடுவான் (14-4) பீதகவாடை யுடைதாழப் பெருங்கார்மேகக் கன்றேபோல் வீதியாரவருவான் (14-5) தருமமறியாக்குறும்பன்; தன்கைச்சார்ங்க மதுவேபோல் புருவவட்டமழகிய பொருத்தமிலி; உருவுகரிதாய் முகம் செய்தாய் உதய பருப்பதத்தின்மேல் விரிபுங்கதிரே போல்வான் 14-6) பொருத்த முடைய நம்பி; புறம்போலுள்ளுங் கரியான்; அருத்தித் தாராகணங்களால் ஆரப் பெருகு வானம்போல் விருத்தம் பெரிதாய் வருவான் (14-7) காட்டைநாடித் தேனுக னுங்களிறும் புள்ளுமுடன் மடிய வேட்டையாடி வருவான் (14-8) விருந்தாவனத்தான்.

## பெருமாள் திருமொழி

228 மாவினை வாய் பிளந்துகந்தமால்; வேலை வண்ணனென் கண்ணன்; வன் குன்றமேந்தி ஆவினையன்றுய்யக் கொண்ட வாயரேறு (1-4) ஏறடர்த்தான் (2-3) 230 தோய்த்த தண்டயிர் வெண்ணெய் பாலுடனுண்டலும் உடன்றுய்ச்சி கண்டு ஆர்த்ததோளுடை யெம்பிரான் (2-4) வன்பேய் முலையுண்டவாயன் (3-4) தாய் முலைப் பாலில முதிருக்கத் தவழ்ந்து தளர்நடையிட்டுச்சென்று பேய்முலை வாய்வைத்து நஞ்சையுண்டான்; பித்தனென்றே பிறரேசநின்றான் (6-4) குன்றினால் குடைகவித்துக் கோலக்குரவை கோத்துக் குடமாடிக் கன்றினால் விளவெறிந்து காலால் காளியன் தலை மிதித்த வென்றிசேர் பிள்ளை. வஞ்சமேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி வரண்டு நார் நரம் பெழக் கரிந்துக்க நஞ்சமார் தருசுழி முலை சவைத்து அருள் செய்து வளர்ந்தான் (7—9) கஞ்சன் நாள் கவர்கருமுகிலெந்தை (7-10) மல்லைமாநகர்க் கிறையவன் றன்னை வான் செலுத்திய மாயத்தெல்லையில் பிள்ளை (7-11)

## திருச்சந்த விருத்தம்

இட்டிடைப் பின்னை கேள்வன் (13 புள்ளின் வாய் பிளந்தான் (19) பூணி பேணுமாயன் (23) நன்னிறத் தொரின் சொலேழை பின்னை கேள்வன் (33 கொம்ப ராவு நுண் மருங்குலாயர் மாதர் பிள்ளை (35) ஆடகத்த பூண்முலை யசோதையாய்ச்சி பிள்ளை; சாடுதைத்தோர் புள்ளதாவி கள்ளதாய பேய் மகள் வீடவைத்த வெய்ய கொங்கைஐயபாலமுதுசெய்தான் ஆடகக்கை மாதர்வாயமுதமுண்டான் (36) காய்த்த நீள் விளங்கனி யுதிர்த்தெதிர்த்த பூங்குருந்தம் சாய்த்து மாபிளந்த கைத்தலத்த கண்ணன், ஆய்ச்சி பாலையுண்டு மண்ணையுண்டு வெண்ணெயுண்டு பின்பேய்ச்சி பாலை யுண்டான் (37) கடங்கலந்த வன்கரிமருப் பொசித்து ஓர் பொய்கைவாய் விடங்கலந்த பாம்பின்மேல் நடம்பயின்ற நாதன், குடங்கலந்த கூத்தனான்; கொண்டல் வண்ணன் (38) வெற்பெடுத்து மாரிகாத்த மேகவண்ணன் 39) மையரிக்கண் மாதரார் திறத்து முன் ஆனையன்று சென்றடர்த்த மாயன் (40 ஆயனாகியாயர் மங்கைவேய தோள் விரும்பினான் (41) ஏறு சென்றடர்த்த வீசன் (42 வெஞ்சினத்த வேழ வெண் மருப் பொசித்து உருத்தமா கஞ்சனைக் கடிந்த காலன், வஞ்சனத்து வந்த பேய்ச்சியாவி பாலுள் வாங்கினான் (43) பொற்றைபுற்ற முற்றல் யானை போரெதிர்ந்து வந்ததைப்

பற்றி யுற்று மற்றதன் மருப்பொசித்த பாகன் 52 மோடியோடிலச்சையாய சாபமெய்தி முக்கணுன் கூடுசேனை மக்களோடு கொண்டு மண்டி வெஞ்சமத்தோட வாணனுயிரம் கரங்கழித்த ஆதிமால் (53) மரங்கெட நடந்தடர்த்து மத்தயானை மத்தகத்து உரங் கெடப் புடைத்தோர் கொம்பொசித்துகந்தவு தமன்; துரங்கம் வாய்பிளந்தான் (58) காலநேமிவக்கரன் கான்முரன் சிரமவை காலனேடுகூட விற்குனித்த விற்கை வீரன் (59) குந்தமோடு சூலம் வேல்கள் தோமரங்கள் தண்டுவாள் பந்தமான தேவர்கள் பரந்து வானகமுற வந்த வாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தான் [70] வண்டுலாவு கோதை மாதர் காரணத்தினுல் வெகுண்டு இண்ட வாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தான்; பூணடனீறன் மக்கள்வெப்பு மோடியங்கி யோடிடக்கண்டு நாணி வாணனுக் கிரங்கினுன் 71) வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த தேநுகன் நாசமாகி நாளுலப்ப நன்மைசேர் பனங்கனிக்கு வீசி மேல் நிமிர்ந்த தோளிலில்லை யாக்கினுன் 80 சாடுசாடுபாதன்; சலங்கலந்த பொய்கைவாய் ஆடரவின் வன்பிடர் நடம்பயின்ற நாதன் 86 பார்மிகுத்த பாரமொழிச்சுவான ருச்சுனன் தேர்மிகுத்த மாய மாக்கி நின்று கொன்று வென்றிசேர் மாரதர்க்கு வான் கொடுத்தான் வையமைவர் பாலதாம் சீர்மிகுத்ததோர் தெய்வம் 89 விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேற் கண் மாதரார் கடிக்கலந்த தோள் புணர்ந்த காலியாயன் 92 தொறுக்கலந்த வூனமஃ தொழிக்க வன்று குன்றமுன் பொறுத்தான் 103 காய்சினத்த காசிமன்னன் வக்கரன் பவுண்டிரன் கேசிதேனுகன் நாசமுற்று வீழநாள் கவர்ந்தான் 107.

### திருமாலை

கற்றினம் மேய்த்தவெந்தை 9 மழைக்கன்று வரை முனேந்தும் மைந்தன் 30 வளவெழுந்தவளமாட மதுரை மாநகரந் தன்னுள் கவளமாள் யானை கொன்ற கண்ணன் 45. ... ... ... ...

### அமலனுதிபிரான்

கோவலனுய் வெண்ணெயுண்டவாயன் 10.

### கண்ணிநுண் சிறுத்தாம்பு

கண்ணிநுண் சிறுத்தாம்பினுல் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன் 1.

— முதலாயிரம் முற்றிற்று —

## (இரண்டாவதாயிரம்) பெரியதிருமொழி

237 இடிகொள் வெங்குரலினை விடையடர்த்தவன் [1-2-3] பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி பெருமுலையூடு உயிரை வற்றவாங்கி யுண்டவாயான் [1-3-1] காளையாகிக் கன்று மேய்த்துக் குன்றெடுத்தன்று நின்றுன் (1—3—4) பேயிடைக் கிருந்து வந்த மற்றவள் தன்பெருமுலை சுவைத்திடப் பெற்றதாயிடைக்கிருத்த லஞ்சுவ னென்று தளர்ந்திட வளர்ந்த வென் தலைவன் [1—4—5] தேரணங்கல்குல் செழுங் கயற் கண்ணிதிறத்தொரு மறத்தொழில் புரிந்து பாரணங்கிமிலேறேழு முன்னடர்த்த பனி முகில் வண்ணனெம்பெருமான் [1—4—3] நண்ணுர்முன் கடுத்தார்த் தெழுந்த பெருமழையைக் கல்லொன்றேந்தி இனநிரைக்காத் தடுத்தான் [1—5–5] தாயாய் வந்த பேயுயிரும் தயிரும் விழுதுமுடனுண்ட வாயான் [1-5-6] விளங்கனி முனிந் தான் [1—6—7] கொங்கலர்ந்த மலர்க்குருந்த மொசித்த கோவலனெம்பிரான்;

பொங்கு புள்ளினைவாய் பிளந்த புராணர் [1—8—1] வன்பேய்முலை பிள்ளையாயுயி ருண்ட வெந்தைபிரான் [1—8—1] நின்றமாமருதிற்று வீழ நடந்தநின்மலன், கன்றி மாரி பொழிந்திடக் கடிதா நிரைக் கிடர்நீக்குவான் சென்று குன்றமெடுத்தவன் [1-8-3] பார்த்தற்காயன்று பாரதங்கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர் கோத்தங் காயர் தம் பாடியில் குரவைபிணைந்த நங்கோவலன் [1—8—4] உறிமேல் நறுநெய்யமுதாக வுண்டான் [1—10—4] மானேய் மடநோக்கி திறத்தெதிர் வந்த ஆனேழ் விடை செற்ற அணிவரைத் தோளன் [1—10—7] வேயினன்ன தோள் மடவார் வெண் ணெயுண்டானிவனென்று ஏசநின்ற எம்பெருமான் [2—2—1] பின்னோர் தூது ஆதி மன்னர்க்காகிப் பெருநிலத்தார் இன்னார்தூதனென நின்றான் [2—2—3] பந்தணைந்த மெல்விரலாள் பாவைதன் காரணத்தால் வெந்திறலே றேழும் வென்ற வேந்தன்; விரி புகழ்சேர் நந்தன் மைந்தனாகவாகும் நம்பி நம்பெருமான் [2-2-4] விற்பெருவிழவுங் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழச் செற்றவன். பற்றலர் வீயக் கோல்கையிற் கொண்டு பார்த்தன் தன்தேர் முன் நின்றான் [2-3-1] நந்தனார் களிறு [2-3-2] வஞ் சனை செய்யத் தாயுருவாகி வந்த பேயலறி மண்சேர நஞ்சமர் முலையூடு உயிர் செக வுண்டநாதன் [2 3-3] அந்தமில் வரையால் மழை தடுத்தான் [2-3-4] ஆயர் பாவை நப்பின்னை தனக்கிறை; பஞ்சபாண்டவர்க்காகி வாயுரை தூதுசென்றியங்கு மென் துணை [2—3—5] இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றான் [2—3—6] காண்டா வன மென்பதோர் காடமரர்க் கரையனது கண்டவன் நிற்க மூண்டாரழலுண்ண முனிந்தவன். முன்னுலகம் பொறை தீர்த்நாண்டான் [2—4—3] புலமன்னுவடம் புனை கொங்கையினாள் பொறைதீர முனாடு வாளமரில் பலமன்னர் படச் சுடராழி யினைப் பகலோன் மறையப் பணிகொண்டணிசேர் நிலமன்னனுமாயுலகாண்டவன் [2-4-3] வென்றிகொள் வாளமரில் பாங்காக முன் ஐவரொ டன்பளவிப் பதிற்றைந் திரட்டிப் படைவேந்தர் பட நீங்காச் செருவில் நிறை காத்தவன் [2—4—4] புக ரார்உருவாகி முனிந்தவனைப் புகழ்வீட முனிந்துயிருண்டு அசுரன் நகராயின பாழ்பட நாமமெறிந்தான் [2-4-7] பரிவாய் கீண்ட சீரான். போரானைக் கொம்பொசித்த போரேறு. புணர் மருதமிற நடந்த பொற்குன்று [2—5—1] தொத்தார் சோலைக் காண்டவத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்தான் [2-5-2] அன்று பேய்ச்சி விடம் பருகுவித்தகன். கன்று மேய்த்து விளையாட வல்லான். வரை மீகானில் தடம்பருகு கரு முகில் [2—5—3] பேய்த்தாயை முலை புண்ட பிள்ளை; பிணைமருப்பிற் கருங்களிறு; பிணைமானேக்கின் ஆய்த்தாயர் தயிர்வெண்ணெ யமர்ந்தகோ; குடமாடு கூத்தன்; கோகுலங்கள் தளராமல் குன்றமேந்திக் காத்தான் [2—5—4] திரிசகடம் பாறி வீழப் பாய்ந்தான்; தூதிற் சென்றப் பொய்யறை வாய்ப் புகப்பெய்த மல்லர் மங்கக் காய்ந் தான் [2—5—5] படுமதத்த களிற்றின் கொம்புபறித்தான் [2-5-6] 300 ஊனுகப் பேய்முலை நஞ்சுண்டான் [2-5 7] மருதிடை போனான் [1—5—10] பஞ்சிச்சிறு கூழை புருவாகி மருவாத வஞ்சப் பெண் நஞ்சுண்ட வண்ணல்; முன் நண்ணாத கஞ் சைக் கடந்தவன் [2 6-7] வெம்பு, சினத்தடல் வேழம்வீழ வெண்மருப்பொன்று பறித்தவர் [2-8-3] மஞ்சுயர் மாமணிக்குன்றமேந்தி மாமழைகாத்தவன். மாயவானை யஞ்ச அதன்மருப்பன்று வாங்கும் ஆயர் [2-8-4] அரவம் வெருவமுனநாள் பூம் புனல் பொய்கை புக்கான் [2-9-5] பிறை புடைவானுதல் பின்னைதிறத்து முன்னே யொருகால் செருவில் லுருமின் மறைபுடைமால் விடையேழடர் தான் [2—9—9].

உறியார்ந்த நறுவெண்ணெயொளியால் சென்றங்குண்டான், ஆய்ச்சியுரலோடார்க்கத் தறியார்ந்த கருங்களிறேபோல நின்று தடங்கண்கள் பனிமல்குந் தன்மையான் (2-10-3) இருங்கைம்மா கரிமுனிந்து பரியைக்கீறி இனவிடைகளேழடர்த்து மருதஞ் சாய்த்து வருஞ்சகடமிற வுதைத்து மல்லையட்டு வஞ்சஞ்செய் கஞ்சனுக்கு நஞ்சானன் (2-10-7) பாரேறு பெரும்பாரந் தீரப் பண்டு பாரதத்துத் தூதியங்கிப் பார்த்தன் செல்வத்தேரேறு சாரதியா யெதிர்ந்தார் சேனை செருக்களத்துத் திறலழியச் செற்றான் (2-10 8) ஆயர் பூங்கொடிக் கினவிடை பொருதவன் (3-1-5) அடல் மழைக்கு நிரை கலங்கிட வரைகுடையெடுத்தவன் 3-1-8 வேல்கொள் கைத்தலத்தரசர் வெம்போரினில் விசயனுக்காய் மணித்தேர் கோல் கொள் கைத்தலத் தெந்தை பெம்மான் (2-1-9) மௌவல் குழலாய்ச்சிமென் தோள் நயந்தான் [2-2-7] மாவாயினங்கம் மதியாது கீறி மழைமாமுது குன்றெடுத்தாயர் தங்கள் கோவாய் நிரை மேய்த்தான் [2-2-8] வாடமருதிடைபோகி மல்லரைக் கொன்றொக்கலித்திட்டு ஆடல் நன்மாவுடைத்தாயரா நிரைக் கன்றிடர் தீர்ப்பான் கூடிய மாமழை காத்த கூத்தன் [2-?-1] பேய்மகள் கொங்கை நஞ்சுண்டபிள்ளை [2-2 2] பண்டவன் வெண்ணெயுண்டானென்றுய்ச்சியர் கூடியிழிப்ப எண்டிசையோரும் வணங்க விணைமருதூடு நடந்திட்டான் [2-2.2] வளைக்கை நெடுங்கண்மடவாராய்ச்சியரஞ்சி யழைப்பத் தளைத்தவிழ் தாமரைப் பொய்கைத் தண் தடம்புக் கண்டர் காண முளைத்தல் வெயிற்றழல் நாகத்துச்சியில் நின்றது வாடத் திளைத்தமர் செய்துவருவான் [2—2—5] உருவக் கருங்குழலாய்ச்சி திறத்தினமால் விடை செற்றுத் தெருவில் திளைத்து வருவான் [2-2-5] மலங்கவரு மழை காப்பான் உய்யப் பருவரை தாங்கி யாநிரை காத்தான் [2—3—1] அழகாய காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழ வீதிவருவான். திகிரியினால் வாணன் திண்டோள் நேர்ந்தவன். மாகீண்டு வேழமட்ட விண்ணவர்கோன். மட்டவிழும் குழலிக்கா வானோர்காவில் மரம் கொணர்ந்தான். வரையெடுத்த தோளான். போரானைக் கொம்பொசித்த புட்பாகன். மன்னர் தூதுவனாயவன். பின்னைதன் காதலன். தடந்தாமரைப் பொய்கை புக்கான். அரவமதனுச்சிதன்மேல் அடிவைத்த அம்மான். முற்றாவிளையார் விளையாட்டொடு காதல் வெள்ளம் விளைவித்தவெம்மான். ஆய்ச்சிமென்தோள் நயந்த விகிர்தன். மருதொடு நற்சகடமிறுத்தருளும் தேவன். கஞ்சன் குஞ்சி பிடித்தடித்த பிரான். தேனுகனும் பூதனைதன் ஆருயிரும் செகுத்தான். காமனைப்பயந்த கருமேனியுடையம்மான். கன்றதனால் விளவெறிந்து கனியுதிர்த்த காளை. குடமாடு கூத்தன். பின்னை செவ்வித்தோள் புணர்ந்துகந்த திருமால். மதயானை கொம்பதனைப் பறித்தெறிந்த கூத்தன். காரார்ந்த திருமேனிக் கண்ணன். காளியன் பணவரங்கில் அருநடஞ் செய்த வும்பர்கோன். கோநிரை மேய்த்தவை காத்தவன். மல்லரைக் கொன்று கஞ்சனை யுதைத்தவன். வாணனை ஆயிரந்தோள்களும் துணித்தவன். பரிகீறிய வப்பன். கஞ்சனைக் காய்ந்த காளையம்மான். வாணனாயிரநீ தோளும் துணிய ஆழிதொட்டான். ஆரும் பேணா நஞ்சுண்டுகந்த பிள்ளை. கருமுகில்போல் திருநிறத்தென் கண்ணர். குன்ற மேந்திக் கடுமழை காத்த வெந்தை பின்னை செவ்வித் தோள் புணர்ந்த வெந்தை. பூங்குருந் தொசித்தான். புள்வாய் பிளந்தான். எருதடர்த்த வெந்தை. பல்லரசவிந்து வீழப் பாரதப்போர் முடித்தான். பாகன் வீழ மதகரி மருப்பொசித்தான் காவ

ளம் கடிதிறுத்துக் கற்பகம் கொண்டு போந்தான். குன்றால் குளிர்மாரி தடுத்துகந்தான் கரிகொம்ப தொசித்த களிறு. கோலால் நிரை மேய்த்த கோவலர்கோ. கவளயானை கொம்பொசித்த கண்ணன். கஞ்சன் விட்ட வெஞ்சினத்த களிறடர்த்த காளை. வஞ்ச மேவி வந்த பேயினுயிரையுண்ட மாயன். ஆயர் மாதர் கொங்கைபுல்கு செண்டன் கார்நிற மேகங்கலந்த தோருருவக் கண்ணனார். கஞ்சனைக் காய்ந்த காளமேகத் திருவுருவன். மாவாய் பிளந்து மல்லடர்த்து மருதம் சாய்த்தமால். மழவிடைகள் ஏழன் றடர்த்தமால். வாணன் தடந்தோள் துணித்த தலைவன். வேந்தர்க்குத் தூதாய வேந்தர். பின்னை பெறுந்தண் கோலம் பெற்றார்: முலைகொடுத்தாளுயிருண்டவன். கானாயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருகநந்தன் பெற்ற ஆனாயன். பேய்மாய முலையுண்டிவ் வுலகுண்ட பெருவயிற்றன். நாமறிய ஆய்ப்பாடி வளர்ந்த நம்பி. மன்னர்க்காய் முன்னம் சென்ற தூதாளன். ஐவர்க்காய் அமரிலுய்த்த தேராளன் பனிகாத்தவம்மான். ஆனாயனான் திரிசகடம் தளர்ந்துதிர உதைத்தவன். ஆழியாலன்றங் காழியைமறைத்தான். பேயினார் முலையூண்பிள்ளை. ஆயனாயன்று குன்றமொன்றெடுத்தான். வக்கரன் வாய்முன் கீண்டமாயன். கண்ணியார் குறுங்கயிற்றால் கட்ட வெட்டென்றிருந்தான். கொம்பனார்பின்னை கோலங்கூடுதற் கேறு கொன்றான். மல்லர்மாள மல்லடர்த்தமல்லன். கோதில் செங்கோல் குடைமன்னரிடை நடந்த தூதன். பின்னை பொருட்டு ஆன்வென்றான். மென்தோளாய்ச்சிக்கன்பன். மருதம் சாய்த்த நாதன். புகுவாய்நின்ற போதகம் வீழப் பொருதான். அந்தணாளன் பிள்ளையை அந்நான்றளித்தான். சிந்துக்கோன் விழ விசயன்தேரூர்ந்த விமலன். பார்த்தன் றன்தேரையூரும் தேவதேவன். இலைத்தடத்த குழலூதி. ஆயர்மாதரினவளை கொண்டான். கனிக்துவர் வாய்ப்பின்னை கேள்வன். பின்னைக்கு மணவாளன். ஒளியா வெண்ணெயுண்டான். ஆப்புண்டு விம்மியழுதான். கல்லார் திரடோள் கஞ்சனைக் காய்ந்தான். காளியன்மேல் பாய்ந்தான். விறல்வாணன் வியந்தோள்வனத்தைத் துணித்துகந்தான். ஆயர்கோவாய் நின்றான். கற்ல் மன்னர் கலங்கச்சங்கம் வாய்வைத்தான். அசோதை தன்சிங்கம். காண்டவத்தைத் தீ மூட்டிவிட்டான். கற்பகத்தை வண்துவரை நட்டான். விசயன் தேரூர்ந்தான். வசுதேவர் வாழ்முதல். வளைகொண்ட வண்ணத்தன் பின்தோன்றல். பகல் கரந்த சுடராழிப்படையான். வரையால் நிரைமுன் காத்தபெருமான். மருவாத விடைதானேழும் வென்றான். குன்று குடையாவெடுத்த வடிகள். புள்வாய் பிளந்த புனிதன். குடமாடிய கூத்தன். ஐவர்க்கின்னருள் செய்யுமெம்பிரான். வெண்ணெயுண்டுரலினிடை யாப்புண்ட தீங்கரும்பு. விளங்கனிமேல் இளங்கன்று கொண்டெறிந்த கூத்தர். நள்ளிருட்கண்வந்த வெந்தை. விடையானோடு விறலாழி விசைத்தான். குன்றால் மாரிதடுத்தவன். கஞ்சனைக் காய்ந்தான். வஞ்சனப் பேய்முலையூடு உயிர்வாய் மடுத்துண்டான் மால்வரையேந்தும் பண்பாளன் பெற்ற தாயாலாப் புண்டிருந்தழு தேங்கும் தாடாளன். கஞ்சனையஞ்ச முனிந்தான். ஆன்விடையேழும் முன்வென்றான். தயிர் வெண்ணெயுண்டுகந்த மாயோன். பேய்முலைத்தலை நஞ்சுண்டபிள்ளை. துரங்கம் படச்சீறிய தோன்றல் துரங்கம் வாய்கீண்டுகந்தான். வரையெடுத்த பெருமான். கரிவெருவ மருப்பொசித்தான். புணர்மருதமிற நடந்தான் தயிருண்ட வாய்துடைத்த மைந்தன், காமன் தன்தாதை நந்தன் மதலை தந்தை காலில் விலங்கறவந்து தோன்றிய தோன்றல்.

மாரிமாக்கடல் வளைவணர்க்கிளையவன் பேயினார் உயிருண்டிடும் பிள்ளை. வெண் சங்கம் வாய்வைத்த மைந்தன். காமற்பயந்தான் கருந்தாள் களிறொன்றொசித்தான். காலால் சகடம் பாய்ந்தான். பஞ்சவர்க்காய்த் தூது சென்றான். கன்றால் விளங்கா யெறிந்தான் வரைகுடையெடுவிய நெடியவர் அளைவெண்ணெய் போதுசெய் தமரிய புனிதர். ஆனாவுருவினானாயன். இருள் நாள் பிறந்தவம்மான் பயோலாழி தட்ட பரமன் உண்ணா நஞ்சுண்டுகந்தான் பஞ்சவர் பாகன் மன்னர்கள் மடிய மணி நெடுந்திண்டேருய்த்தவன். வெஞ்சினவேழம் மருப்பொசித்த வேந்தர் கோவலர்கூத்தன். கலிமாந்தேரைவர்க்காயமரிலுய்த்தான் சினவேழம் கொலையார் கொம்பு கொண்டான். ஆயனாயமைந்தனார் தூதுசென்ற மன்னனார். குடங்கலந்தாடிக் குரவை முன் கோத்தகூத்த வெம்மடிகள். வடமாமதுரைப் பிறந்தான். கேசவநம்பி. பாரதத்துத் தேர்முன் நின்றுகாத்தவன். மாமழை நின்று காத்துகந்தான். ஆனைவாட்டியருளும் அமரர்தம்கோ. கூந்தலார் மகிழ் கோவலன். பெற்றமாளி. நந்தன் பெறப்பெற்ற நம்பி. தெருவில் திளைக்கின்ற நம்பி. விரையாதே வெண்ணெய் விழுங்கும் விகிர்தன். வஞ்சப் பெண் நஞ்சுண்ட கற்றாயன். பேய்ச்சி முலைபுண்டபிள்ளை நந்தன்தன் போரேறு. அளைவெண்ணெ யுண்டாச்சியரா லாப்புண்டிருந்தவன் உரலோடாப் புண்டிருந்த பெருமான். மாலை நறுங்குஞ்சிநந்தன் மகன் தெள்ளிய வாய்ச்சிறியான் நந்தன் பெற்றமதலை மன்னுகருங்களிற்றாருயிர் வவ்விய மைந்தன் ஆய்மடவாரொடுகூடிக் குரவை பிணை கோமளப்பிள்ளை மாவாய் கீண்ட மணிவண்ணன் மாமழை அன்று காத்தவம்மான் ஐவர் தூதனாய்ச் சென்றமாயன். இளையாரொடும் மன்றில் குரவை பிணைந்தமால். வன்பேய் முலைவாங்கியுண்ட அவ்வாயன். மல்லொடு கஞ்சனும் துஞ்சவென்ற மணிவண்ணன். வென்றிவிடையுடன் ஏழடர்த்தவடிகள். உறியார் நறுவெண்ணெ புண்டுகந்தார். இமையோர் தொழுதேத்திக் கைத்தாமரை குவிக்குங் கண்ணன். இணைமருதிற்று வீழநடைகற்ற தெற்றல். நந்தன் குலமதலையாய் வளர்ந்தான். தாழ்குழலார் வைத்த தயிருண்டான். உறியார் நறுவெண்ணெயுண்டுகந்தான். கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான் கண்களிப்ப மன்றில் மரக்கால் கூத்தாடினான். தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான். தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தான். மேவாளுயிருண்ட முதுண்டவாயான். உறியார் நறுவெண்ணெய் தானுகந்துண்டசிறியான். ஆன்விடையேழன்றடர்த்தான். குன்றமெடுத்தானிரை காத்தவன்.

## திருநெடுந்தாண்டகம்

(1[illegible]) கல்லெடுத்துக கல்மாரிகாத்தான். மல்லடர்த்து மல்லரை அன்றட்டான். மாகீண்டகைத் தலத்தென் மைந்தன். (16) கன்று மேய்த்தினிதுகந்த காளை. மன்ற மரக்கூத்தாடி மகிழ்ந்தான். வென்றசுரர்குலம் களைந்த வேந்து. (26) ஆமருவிநிரை மேய்த்த அமரர்கோமான். (29) ஆயர்குலமகளுக்கரையன். குன்றெடுத்த தோளினான்

## மூன்றுவதாயிரம் - இயற்பா

(முதல்திரு.) சூருருவிற் பேயளவுகண்ட பெருமான். அசைவில் சீர்க்கண்ணன். அலகளவு கண்ட சீராழியான். பேய்முலை நஞ்சூணாகவுண்டான். புள்வாய்கீண்டான். மருதிடைபோயவன். பெற்றார்தளைகழலப் பேர்ந்தவன் . கடைவெண்ணெயுண்டான்.

மலையால் குடைகவித்தான். மாவாய் பிளந்தான். கொலையானைப் போர்க்கோடொசித்தான். பூங்குருந்தஞ் சாய்த்தான் வெண்சங்கமுதியவாய்மால் புணர் மருதினூடு போனான். பூங்குருந்தஞ் சாய்த்தான். மால்விடையேழ் செற்றான் சோலை சூழ்குன்றெடுத்தான் குன்றெடுத்துப் பாயும் பனிமறுத்த பண்பாளன். கனிசாயக் கன்றெறிந்ததோளான் மாவாய் பிளந்தமகன் நல்லாயரேறு. ஏறேழும் வென்றடர்த்தவெந்தை கோணாகங் கொம்பொசித்தகோ கூந்தல் வாய்கீண்டான் கொங்கை நஞ்சுண்டான் விளவின்காய் கன்றினால் வீழ்த்தவன் (3. திரு.) வக்கரனைக் கொன்றான். விழுதுண்ட வாயான். மால்விடையேழ் செற்றான். பேய்ச்சிபாலுண்டபிரான் பேய்ச்சிபாலுண்ட பெருமான் தெருளாமொழியான் குருந்தொசித்த கோபாலகன் கஞ்சைக்கடந்தான் குன்றம் குடையாக ஆகாத்த கோ துரகவாய் கீண்டான் முற்றல் முரியேற்றின் முன்னின்று மொய்ம்பொழித்தான் அருவரையால் ஆனிரைகள் காத்தான் அணிமருதம் சாய்த்தான் கற்றுக்குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான் வெற்றிப்பணிலம் வாய்வைத் துகந்தான் கரியுருவம் கொம்பொசித்தான் விளங்கனிக்குக் கன்றெறிந்தான் .மற்பொன்ற நீண்ட தோள்மால் குழக்கன்று கொண்டெறிந்தான் குடநயந்த கூத்தன் வெங்கொங்கையுண்டான் புரளுள் வலஞ்சுழிந்த மொய்ம்பன் பின்னைக்காய் ஏற்றுயிரையட்டான் தீங்குழல்வாய் வைத்தான் மண்ணுண்டும் பேய்ச்சி முலையுண்டு மாற்றாதான் கண்ணிக் கயிற்றினால் கட்டக் கட்டுண்டிருந்தான் வாணன் தோள் செற்றான் துரகத்தை வாய் பிளந்தான் (நான்மு. திரு.) வெங்கதிரோன்மாயத் தேராழியால்மறைத்தார் சினப்போர்ச்சு வேதனைப்புகழ்ந்தான் புலைக்கால் விடமுண்ட வேந்தன் பெருங்குருந்தம் சாய்த்தவன் (திருவி.) முனி வஞ்சப் பேய்ச்சி முலை சுவைத்தான் மாண்குன்றமேந்தி ஆய்ச்சிவன்தாம்புகளால் புடைக்க அலர்ந்தான். ஆவினை மேய்க்கும் வல்லாயன் சுருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வன். (பெரிய திரு.) ஐவரையேகாத்தான் தாமோதரனார் வெங் கோட்டேறேழுடனே கொன்றான் மாவாய் பிளந்தார் மாயவள் நஞ்சூண் பாவித்துண்டான். கன்றுயரத்தாமெறிந்து காயுதிர்த்தார். உருமாறு மாயவர் புள்ளின்வாய் கீண்டான். குன்று குடையாக ஆகாத்த கோவலனார். ஆழியங்கைப்பேராயன். மல்லர்நாள்வவ்வினன் கைகலந்த வாழியான். (சி திருமடல்) ஆராவயிற்றினோடாற்றாதான் வெங்கோவியல் நாகத்தைச் சீரார் திருவடியால் பாய்ந்தான் பேராமருதிறுத்தான் ஓரானை கொம்பொசித்த சீரான் (பெரிய ம) பின்னைமணாளன் பேயலற முலை யுண்டபிள்ளை மன்னர் பெருஞ்சவையுள் வாள்வேந்தர் தூதன்.

## நான்காவதாயிரம் - திருவாய்மொழி

(1) களவேழ் வெண்ணெய் தொடுவுண்டகள்வன் வல்லாயர் தலைவன் இளவேறேழும் தழுவியவெந்தை விடப்பாலமுதா அமுது செய்திட்ட மாயன் எங்களாயர் கொழுந்து இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்துவிழிக்கும் பிரான் வெம்மாவாய் கீண்ட செம்மா கண்ணன் வெற்பையொன்றெடுத்தொற்க மின்றியே நிற்குமம்மான் வைகலும் வெண்ணெய் கைகலந்துண்டான் ஏழ்விடை கொண்டான் வேழமருப்பை யொசித்தான் கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரான் (2) உருளுஞ்சகடமுதைத்த பெருமானார் கோபால கோளரியேறு காக்குமியல்வினன் கண்ணபெருமான். கார்முகிலென் கண்ணன் உறிக்கொண்ட வெண்ணெய் பாலொளித்துண்ணு.

மம்மான். விறல்வாணனுயிரந்தோள் துணித்தார். விறல்கஞ்சனை வஞ்சனை செய்தார். காரார்கருமுகில் போலென்னம்மான். குடக்கூத்தவம்மான். வரரணத்தை மருப் பொசித்த பிரான் காமனைப் பயந்தான் கார்முகில்போல் வண்ணனென் கண்ணன் கையார்சக்கரக் கண்ணபிரான் அழக்கொடியட்டான் வாணனை யாயிரந்தோள் துணித்த புள்வல்லான் மாமருதினிடை போயவெம்பெருந்தகை வேயின்மலிபுரை தோளிபின்னைக்கு மணாளன் வைதிகன் பிள்ளைகளையுடலொடுங்கொண்டு கொடுத்த வன் துயரமில் சீர்க்கண்ணன் மாயன் கடிசேர் துழாய் முடிக்கண்ணன் பனைத்தாள் மதகளிறட்டவன் ஆய்ச்சியர் தம்மொடும் கொல்லைமை செய்துகுரவை பிணைந்தவர் எருதேழ்தழீஇக்கோளியார் கோவலனார் குடக்கூத்தனார் கோவைவாயாள்பொருட்டு ஏற்றினெருத்தமிறுத்தான் குலநல்யானை மருப்பொசித்தான் மாயப்பேயுயிர் மாய்த்த வாயமாயன் கண்ணனெம்பிரான் காலசக்கரத்தான் பேய்ச்சி முலைசுவைத்தான் வல்வினை தீர்க்குங்கண்ணன் வெம்மாபிளந்தான் குன்றமொன்றால் மழைகாத்த பிரான் குடமாடி மாயப்போர்த் தேர்ப்பாகனார் கவளக்கடாக்களிறட்ட பிரான் வண்துவராபதி மன்னன் கடையாவின் கழிகோல்கைச் சறையினார் நெறியெல்லா மெடுத்துரைத்த நிறை ஞானத் தொருமூர்த்தி தயிர் வெண்ணெயுண்டான் ஊர்ந்த சகடமுதைத்த பாதத்தன் பேய்முலைசார்ந்து சுவைத்த செவ்வாயன் காரமர் மேனி நங்கண்ணன் வண்துவராபதி மன்னன் மணிவண்ணன் வாசுதேவன் காவிசேர் வண்ணனெங் கண்ணன். காரன்ன மேனிநங்கண்ணன் கைவந்த சக்கரத்தென் கண்ணன். குலவாயர் கொழுந்துக்குக் கேள்வன் மாறுசேர்படை நூற்றுவர்மங்க நீறுசெய்த வெந்தை. கைதவங்கள் செய்யுங்கருமேனியம்மான். புள்ளின்வாய்பிளந் தான் மருதிடை போயினான். எருதேழடர்த்த வென்கள்ளமாயவன். பேய்ச்சிமுலை யூடவளையுயிருண்டான். ஆயர்குலத்தை வீடுய்யத் தோன்றிய கருமாணிக்கச்சுடர் வெண்ணெய்வார்த்தையுள் சீற்றமுண்டழுகூத்தவப்பன் துரங்கம் வாய்பிளந்தான். நாடுடை மன்னர்க்குத் தூதுசெல்நம்பி. சாயக்குருந்தமொசித்த தமியன். மாயச்சகட முதைத்த மணாளன் பேயைப் பிணம்படப் பாலுண்டபிரான். மற்பொரு தோளுடை மாயப்பிரான் ஆடியமாநெடுந் தேர்ப்படை நீறெழச்செற்றபிரான். மாவை வல்வாய் பிளந்த மதுசூதன். கார்த்திரள் மாமுகில்போல் கண்ணன். சகட வசுரருடல் வேறுப்பிளந்து வீயத்திருக்காலாண்டபெருமான். கொடுவல்லசுரர் குலமெல்லாஞ் சீறு வெறிபுந்திருநேமி வலவன். புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவேபோன முதல்வன் அடலாழியேந்தியசுரர் வன்குலம் வேர்மருங்கறுத்தான். உட்குடையசுரருயி ரெல்லா முண்டவொருவன். குன்றேந்திக் கோநிரைகாத்தவன். ஆய்மகளன்பன். முழங்கு சங்கக்கையன். கனிந்த விளவுக்குக் கன்றெறிந்த கண்ணபிரான். ஆழியங்கையன் தீமழைகாத்துக் குன்றமெடுத்தன். குன்றமெடுத்த பிரான். குன்றெடுத்தாநிரை மேய்த்தவை காத்த வெங்கூத்தன் ஆயர்குலத்தீற்றிளம் பிள்ளை. ஆழியங் கண்ண பிரான் ஈட்டிய வெண்ணெயுண்டான். சித்திரத் தேர்வலவன் திருச்சக்கரத்தான். கள்ளவிழ் தாமரைக் கட்கண்ணன். துயரங்கள் செய்யுங்கண்ணன் என்னையாளுங் கண்ணன் உருப்பிணி நங்கையணி நெடுந்தோள் புணர்ந்தான். வாணனையாயிரந் தோள் துணித்தான். எடுத்த பேராளன் நந்தகோபன்தன் இன்னுயிர்ச் சிறுவன் அசோதைக்கடுத்த பேரின்பக் குலவிளங்களிறு. பின்னைதோள் மணந்த பேராயன்.

அசுரர்வன்கையர்வன் கூற்றம். கோதில் புகழ்க்கண்ணன். கஞ்சனைத் தகர்த்த சீர்கொள்சிற்றுயன். நல்தேர்த்தனிப்பாகன். உத்தர மதுரைப் பிறந்தமாயன். பாரதம் பொருதமாயன். புகழும் பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப் பொன்றுவித்தான். மல்லலஞ் செல்வக்கண்ணன். புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னுழிக்கை யென்னம்மான். ஐங்கணை வேள்தாதை. மல்லைமூதூர் வடமதுரைப் பிறந்தவன். எங்கள் பெற்றத்தாயன். தாதுசேர்தோள் கண்ணன். மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான். மழைக்கன்று குன்றமெடுத்தா நிரைகாத்தான். தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணன். ஆருமதயானையடர்த்தவன். என்னுயிர்க் கண்ணபிரான். வித்தகன் கோவிந்தன். கருவளர் மேனிநங் கண்ணன். கடியனுய்க் கஞ்சனைக் கொன்றபிரான். வடிவேல் தடங்கண் மடப்பின்னை மணாளன். வாளேய் தடங்கண் மடப்பின்னை மணாளன் எம் கோவலர் கோ இகலிடத்தசுரர்கள் கூற்றம். காரொக்கு மேனிநங்கண்ணன். மடப்பின்னைதன் கேள்வன். குதற்று வல்லசுரர்கள் கூற்றம். அசுரரைத் துணிக்கும் வல்லரட்டன் காமனைப் பயந்த காளை. செங்கனிவாயெங்களாயர் தேவு. வாள் கெண்டையொண் கண்மடப் பின்னைதன் கேள்வன். கைச்சக்கரத்தண்ணல். மெய்போலும் பொய்வல்லன். பாழியந்தோளால் வரையெடுத்தான். வாரணந் தொலைத்த காரணன். பேயார் முலைபுண்ட வாயான். மன்னஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்ப் படைதொட்டான். கொலையானை மருப்பொசித்தான். ... ... ... *

ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன் திருவடிகளே சரணம்.

கூடிநாம் (மதுரை)

ஸ்ரீ உ. வே. ஸ்வாமி திருவடியிணைகளில் அடியேன் ரங்கராஜன் தண்டன் ஸமர்ப்பித்து விஜ்ஞாபனம். ஸ்வாமியின் ஸ்ரீமுகங்களையும், ஸ்ரீ ராமாநுஜனையும் (352) சேவித்துக்கொண்டேன் ஸபையின் வார்ஷிக மஹோத்ஸவத்துக்கு 'ஸ்ரீ ராமாநுஜன் - மங்களாசாஸனக் கட்டுரை' மகுடமாய் அணிசெய்தது. 4, 5 இருநாள் நிகழ்ச்சிகள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. 4-10-77 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணி அளவில் ஸத்ஸம்ப்ரதாய ஸபையின் துணைத்தலைவரான ஸ்ரீமான் அழகர்சாமி நாயுடு அவர்களுக்குச் சபையின்மூலம் பாராட்டுவிழா இனிதே நடந்தது. இவ்விழா புத்தூர் வக்கீல் ஸ்வாமி ஸ்ரீ உ.வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் தலைமையில்நடந்தது. ஸ்ரீ உ.வே. வித்வான் சதாபிஷேகம் ஸ்வாமி ' ஸ்ரீ வைஷ்ணவர்களின் கடமை'' என்ற தலைப்பில் உபந்யஸித்தார். திருநாங்கூர் பிரதிவாதி பயங்கரம் K. ஸ்ரீநிவாஸாச்சாரியார் ஸ்வாமி ''எம்பெருமானுர் வைபவம்'' பற்றி உரையாற்றினுர். மறுநாள் ஆண்டுவிழா அன்று ஸ்ரீ உ. வே. P. B. K. ஸ்ரீநிவாசாச்சாரியார் ஸ்வாமி தலைமை வகித்தார். ஸ்ரீ உ. வே. அபிஷேகாச்சாரியார் ஸ்வாமி ''ஸ்ரீ ராமாநுஜன்'' மங்களாசாசனக் கட்டுரையை முற்றிலும் வாசித்து விரிவுரையுமாற்றினுர். புத்தூர் வக்கீல் ஸ்வாமியின் இனிமையான உபந்யாஸம் நடைபெற்றது. ஸ்ரீ ராமாநுஜன் 352 எல்லாருக்கும் விநியோகிக்கப் பட்டது. தேவரீர் எழுந்தருளாதகுறை ஓருவாறு தீர்ந்தது. மற்ற விசேஷங்களைப் பிறகு தெரிவித்துக்கொள்ளுகிறேன். தாஸன், R. ரங்கராஜன், M.A.,

ஸ்ரீரஸ்து.

# எம்பெருமானார் ஆதிசேஷாவதாரர்

**ஸ்ரீ** காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் மஹாமஹோபாத்யாய
**அண்ணங்கராசார்யர் ஸ்வாமி**

---

ஸ்ரீ வைகுண்டநாத ஸ்தோத்ரபத்யமான * ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய * என்கிற சுலோகத்தில் * நாகபோகே நிதாய * என்றவிடத்தில் எம்பெருமானாருடைய சேஷாவதாரத்வத்தை அந்தரங்கார்த்தமாகப் பெரியார் அநுஸந்திப்பதுண்டாதலால் அந்த அவதார ரஹஸ்யம சிறிது விவரிக்கப்படுகிறது.

இராமானுச நூற்றந்தாதியில் (33) * அடையார்கமலத் தலர்மகள் கேள்வன் * என்னும் பாசுரம் எம்பெருமானாரைப் பஞ்சாயுதங்களின் திருவவதாரமாகச் சொல்லிற்றே யன்றி ஆதிசேஷாவதாரமாகச் சொல்லிற்றில்லை. அப்பாசுரத்தை யடியொற்றி ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் யதிராஜ ஸப்ததியில் * ப்ரதயங் விமதேஷு தீக்ஷ்ணபாவம் * என்கிற சுலோகத்தில் * வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே: * என்று பஞ்சாயுதாவதார பூதரென்றார். அதிலேயே * விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட: * என்று விஷ்வக்ஸேநாவதார பூதரென்றும் ஸாதித்துள்ளார். ஆதிசேஷாவதாரபூத ரென்பதற்கு ப்ரமாண மென்னென்று பலர் உணரவிரும்புவர்கள். அன்னவர்கட்கு உணர்த்துகின்றோம்.

ஆசாரியர்களைப்பற்றி அவதரிக்கும் நூல்கள் ஸ்தோத்ர க்ரந்தங்களென்றும் சரித்திர க்ரந்தங்களென்றும் இருவகைப்படும். ஸ்தோத்ர க்ரந்தங்களில் பெரும்பாலும் உத்ப்ரேக்ஷைகள் மிக்கிருக்கும். சரித்திர நூல்களைக்கொண்டுதான் அவதாரதத்துவத்தை நிர்ணயிக்கலாகும்.

திருமலை அனந்தாழ்வா னருளிச்செய்த ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸமாலையில்—"ச்ரிய:பதி: நிஜாந்தரங்ககிங்கரம் தல்பபூதம் அநந்தம் தரணீதலே அவதீர்ய..........." இத்யாதி ஸ்ரீஸூக்திகள் சரித்திரங் கூறும்வகையில் முதன் முதலாக அவதரித்தவை. இவற்றின் பொருளாவது—எம்பெருமான் தனது அத்தாணிச் சேவகனும் படுக்கையுமான திருவனந்தாழ்வானை நோக்கி, 'நீ நிலவுலகத்திற்குச் சென்று பிறந்து எவ்வுயிரையும் உய்விக்கக் கடவை' என்று நியமித்தருள அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்ட ஆதிசேஷன் அப்படியே பிங்கள வாண்டில் சித்திரைத் திருவாதிரையில் கேசவஸோமயாஜிகளுக்குப் புதல்வனாகப் பிறந்தருளினன் என்பதாம்.

ஸ்வாமியின் ஸமகாலத்தவரான வடுக நம்பியும் தாம் பணித்த ச்லோக ரூபமான யதிராஜவைபவத்தில் "வேதாந்த ஸித்தாந்தஸமர்த்தநாய பாஹ்யாந்தர ப்ராந்த மதாபநுத்த்யை, சேஷாம்சக: கேசவயஜ்வதேவ்யாம் தேஜோநிதி: கச்சிதிஹாவிராஸீத்."

என்றருளினர். [வேதாந்தஸித்தாந்த ஸ்தாபனார்த்தமாகவும், தியமதங்களைத் தொலைப் பதற்காகவும் திருவனந்தாழ்வானுடைய அம்சபூதராய் தேஜோநிதியான ஒரு மஹான் கேசவஸோமயாஜிகளின் தேவியாரிடத்தில் திருவவதரித்தார் என்றவாறு.]

எம்பெருமானாரையல்லது தேவு மற்றறியாதவரும் மஹாகவிச்ரேஷ்டருமான கருடவாஹநபண்டிதர் தாமியற்றிய திவ்யஸூரி சரித மஹாகாவ்யத்தில்—

"பௌஜங்கம் வபுரபஹாய சேஷபோகீ
யத்ரூபம் த்ரிபுவந வந்திதம் ஜகாம"

[திருவனந்தாழ்வான் தனது உரகவுடலை விட்டொழித்து மூவுலகும் போற்றும் இராமானுச முனியுருவத்தை யெய்தினன்] என்றுரைத்தனர்.

அக்காலத்தில் அரசனது புதல்வியை நலிந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸை யோட்டுவதற்காக யாதவப்ரகாசன் தனது வித்யார்த்தி மண்டலத்தோடுகூட ராஜக்ருஹம் சென்று ஏதோ மந்திரிக்க, அப்போது அந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொன்ன வார்த்தையை இந்த திவ்யஸூரி சரிதகாரர்,

"த்ரஸ்தோஹம் தவ ஸவிதோஷிதாதமுஷ்மாத்
சேஷாம்சாத் புவமவிதும் க்ருதாவதாராத்."

என்று ச்லோகமாக்கியுள்ளார். "ஓ யாதவரே! உமக்கு நான் அஞ்சமாட்டேன்; உமது அருகே யிருப்பவரும் இம்மாநிலத்தைக் காத்தருள ஆதிசேஷாம்சமாக அவதரித்தவருமான இந்த மஹானிடத்தில் நானஞ்சுகின்றேன்" என்றதாயிற்று.

இங்ஙனே அளவுகடந்த ப்ரமாணங்கள் உள்ளன.

"அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத:பரம்,
பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலௌ ராமாநுஜஸ் ஸ்ம்ருத:."

**எம்பெருமானார் திருவடிகளே சரணம்.**

# தொண்டனூர் விசேஷத்தைப்பற்றி

(மேல்கோட்டை) திருநாராயணபுர ப்ராந்தத்தில் எம்பெருமானார் காலம் தொடங்கி ஸுப்ரஸித்தமான தொண்டனூரில் 2—10—77 நன்னாளில் மிகப்பெரிய விசேஷகோஷ்டி நடைபெறப் போகிறதென்பது முன்னமே நாடு நகரமும் பரவியிருந் தது. பத்திரிகைகளிலும் பிரசுரமாகியிருந்தது. இன்று (4—10—77ல்) ஸ்ரீமதுபயவே T. A. T. ஸ்வாமி (மைலாப்பூர். திருமலை. அனந்தாண்பிள்ளை. திருவேங்கடாசாரியர் ஸ்வாமி அடியேனுக்கு கிருபை செய்தருளின ஸ்ரீமுகத்தினால் அவ்விடத்தில் நிகழ்ந்த விசேஷங்களைச் சுருக்கமாக அறிந்து பரமானந்தமடைந்தேன்.

அந்த ஸ்ரீமுகமே இதன்கீழ் வெளியிடப்படுகிறது;—

"………தாஸஸ்ய விஜ்ஞாபனம். உபயகுசலம். அடியேன் 1—10—77ல் தொண்ட னூர்க்குப் புறப்பட்டுப்போய் இன்று (4—10—77ல்) திரும்பி விடைகொண்டேன். தேவரீருடைய திருமேனியின் அசக்தியை நோக்கியே மறுபடியும் விடைகொண்டு நிர்ப்பந்தப்படுத்தாமல் புறப்பட்டுப்போனேன். ஸ்ரீ உவே. T. N. C. ஸ்வாமி அதிவிமரி சையாக நடத்திவைத்தார். சுமார் 2000 திருநாமங்களும், இதர ஜனங்கள் 8000த் திற்கும் மேலாகவே குழுமியிருந்தபடி. ஆறுவேளைகளில் திவ்யப்ரபந்த ஸேவை நடந்து, ஞாயிறு காலை சாத்துமுறையும், பதினான்கு திவ்ய தேசங்களிலிருந்து கமிஷ னர் உத்தரவுபடி திருப்ப[illegible]வட்ட பீதாம்பரப்ரஸாதங்களும் வந்து சேர்ந்து சாத்தப்பட் டது. திருமலையிலிருந்து ஸ்ரீ அன்னாராவுடன் பேசி நல்லபீதாம்பரமொன்று கிடைக்கப் பெற்றது. ஸ்ரீமத்பரகால ஸ்வாமிகள் ஸ்ரீமத்யதிராஜ ஜீயர் ஸ்வாமிகள் மைஸூர் ப்ராந்தவித்வான்கள், ஸ்ரீ பிள்ளைலோகம் ஸ்வாமி, கோயில் பூவராஹஸ்வாமி முதலானோர் கலந்துகொண்டார்கள். ஸதஸ்ஸில் *ஸ்வயம்பாதம் ப்ரஸார்யபடமும், தேவரீருடைய விவரணமும் ஸ்ரீபூவராஹன் ஸ்வாமியின் விளக்கத்துடன் 500 பிரதிகள் விநியோகிக் கப்பட்டன. தேவரீர் எழுந்தருள்வதை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தவர்கள், திரு மேனிக்கு ஏற்படும் சிரமத்தை அடியேன் விளக்கிக் கூறினபிறகே சாந்தியடைந்தனர்.

இப்படிக்கு.

**தி. அ. திருவேங்கடாசாரி.**

P. B. A. அடியேன் செய்யும் விண்ணப்பம்;— மேலே குறித்த தொண்டனூர் விசேஷத்தில் அடியேனுக்கு நிர்ப்பந்தமான அழைப்பு கிடைத்திருந்தும், அடியேனும் தொண்டனூர் விடைகொள்ளக் குதூஹலங்கொண்டிருந்தும் ப்ராப்தமாகாதது பெருங் குறையே. ஸ்ரீ உவே. N. C. நரஸிம்ஹாசாரியர் இதம்பரமாக நேரில்வந்திருந்து மனோரதங்களைத் தெரிவித்தபோது ஆயிரம் திருநாமங்களைத் திரட்டி யநுபவிக்க ஆசை என்றார்; இரண்டாயிரம் ஸ்வாமிகளும் எண்ணாயிரம் இதரஜனங்களும் கூடி யிருந்து குளிர்ந்ததாக அறிந்து, நமது ஜீவிதகாலத்தில் மறுபடியும் இப்படியொரு ஸந்தர்ப்பம் நேரமாட்டாதே! இப்போது இழந்தோமே! என்று மிகவும் கிலேசிக்க லாயிற்று.

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தி பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M: O. செய்பவர்கள்

P. B. ANNANGARACHARYA,

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

Kanchipuram. Pin Code-631503.

To

Sriman/Srimathi

784. Sri P.A. Thiruvenkatacharya
16, M.M. Sannidhi Street
SRIPERUMBUDUR 602105



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by E. Devarajan at Sri Kamakshi Press,
44-c, Thirukatchinambi Street, Kancheepuram-631503